சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

---

SABHAPATHI PILLAI,
*Tamil Pandit,*
*College, Coimbatore.*

---

கோயமுத்தூர் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்
கும்பகோணம் R. சபாபதிபிள்ளையவர்கள்
இயற்றிய சிறப்புப்பாயிரம்.

---

பூமலி சந்தனக் காமலி பொதியத்
திருந்தவன் றன்பா லருந்தமிழுணர்ந்த
வொல்காப் பெரும்புகழ்த் தொல்காப்
பல்கா லாய்ந்துசொல் யாப்பி லக்
விரிந்துள வகையைத் தெரிந்து சி
கற்றுணர் பொருட்டுத் தெற்றென
சொன்னயம் பொருணயந் துன்னுப
பன்னுவலர்க ளென்னரும் வியப்ப
ஆடியெத்தகைய நாடிய பொருளெலாம்
ஒளிதகங் காட்டல்போற் களிமகி

# நூல்

ிற்று:—
யென்று
வரை

## உறுப்பியல்.

இலங்கு முயிர்நிலை ஈசனை யேத்தித்
துலங்கக் கூறுவன் றொன்னடைப்பாவே. (க)

இத்தலைச்சூத்திர மெல்லாம் வல்ல கடவுளைப் பணிதலால் நன்மை யுண்டாதல் பற்றிக் கடவுள் வணக்கங் கூறுதனுதலிற்று:—என்னின், தேசோரூபியாயு, முயிர்கண் மூவினையகன்று நிலையாய விதேககைவல்லிய மடைதற்பொருட்டு மங்களமாயும் விளங்கு மிறைவனைப்பணிதலாற் பழமையிலமைந்ததும், இயலிசை நாடகமென்னு முத்தமிழுட்டலைமை யியற்றமிழுமாய பாவிலக்கண மினிது விளங்கக் கூறுவனென்றார்: இது "நுதலிப்புகுத"லென்னுமுத்தி:—

எழுத்தே யசைசீர் தளையடி தொடையோ
டிழுக்கா நடைய தியாப்பெனப் படுமே. (உ)

இஃது யாப்புறுப்பினைக் கூறுதனுதலிற்று:—என்னின்-எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை இவை பொருந்தி நொனமையாக ஆன்றோராலமைக்கப்பட்டு வழங்

நடையினின்று வழுவாத வியலினது யாப்பெல்லப்படு மென்று கூறினரென்க;—அசைமுதலின யுறுப்புகட்கெழுத்தேயாதிகாரணமானமையாதே என்றனர். இழுக்காநடையதெனவேமொழிந்தவாறுறுப்பிற்குறையாதென்க. யாப்பென்றுதி யாப்பெனப்படுமே என்றதொரு சாரொப்புமையுந் தொன்மையுநோக்கி நூல், மந்திர, முதலாயவற்று ளமைத்தலினென்க– இஃது "தொகுச்சுட்டலெ" னுமுத்தி. இச்சூத்திரம் "மற்கோளாதலினுற்று னெடுத்துமொழிதலெ" னுமுத்தி.

மொழியினதாக்கந் திரியா மரபி
னெழுத்தா மிசையு மேற்றமுங் குறைவு
மொருகா லசைக்க வொன்றின தசையே. (௩)

இஃது முன்னொருசூத்திரச் சுட்டினவற்றை வகுத்துக்காட்டுவான் றொடங்கியசையாமாறுணர்த்துதனுதலிற்று, எனின்; சொற்றன்மை வழுவாமுறையின் எழுத்தாயவிசையினியல்பு மளபெடையுங் குறுக்கமுமசைத்துச் சரிப்பிற்பொருந்துமிசை யொவ்வொன்று மசையாமென்றார்:—மொழியினதாக்கந்திரியா மரபினொன்றின தசையெனவே, எழுத்துமொழியுமாகா வீழை யிருமல்முதலிய வோசையுமொழி முறியிலக்கியத்து ளசையாதலுமுணர்க. எழுததென்றது முதலுஞ்சார்புமாகிய விருவகையுமென்க. ஏற்றமிரண்டசையாகுமெனின்; குறினெடிலாகு மளபென்க. இவை மேலைச்சூத்திரத்திற்காட்டுதும்:—

அவைதாம்:—

நேர்நிரையென் றிருபாற் றியல. (௪)

இஃது அசையின் வேறுபாடுணர்த்துதனுதலிற்று:—என்னின்; முற்கூறிய வசை நேரசை நிரையசையென்று மிரண்டு பகுப்பின் கணவாகி நடக்கும், என்றார். அவைதாம், என்பது கூன்.

குறிலுநெடிலு மெய்கூடினு நேரசை. (௫)

இஃது நேரசையாமாறுணர்த்துதனுதலிற்று:—என்னின்; குற்றெழுத்து நெட்டெழுத்து மொற்றடுத்து வரினுநேரசையாமென்றார்:—கூடினும் எனவே கூடாவிடினும் நேரசையாமென்க. ஆ: பூ; வெள், வேல்; இவையனைய.

குறிலிணை குறினெடின் மெய்ம்முறு நிரையே. (௬)

இஃது நிரையசை யாமாறுணர்த்து தனுதலிற்று:—என்னின்; இரண்டு குறிலு மொருகுறிலொடு நெடிலு மொற்றடுத்து வரினு நிரையசையென்றார்:—மெய்ம்முறுமெனவே மெய்கூடாவிடினு நிரையசையென்க. வெறி, சுறு; நிறம், விளாம்; இவையனைய.

அசையே சீரா யமையச் சிறந்த
வொன்றா யிரண்டா மூன்றா நான்காத்
தன்றொடும் பிறிதொடுந் தாக்குழி யெண்ணுப
விரண்டா நான்கா வெட்டா விரட்டியா
வரையிய லுரிபொது வாமென மொழிப. (எ)

இஃது முன்னெடுத்துச் சுட்டிய உறுப்பினுள் சீரா மாறுணர்த்துத னுதலிற்று:—என்னை; அசையொருங்காச் சேரச் சீராம்; அவ்வசையொவ்வொன்றாகவு மிவ்விரண்டாகவு மம்மூன்றாகவு நன்னான்காகவுஞ் சேர்க்கப்பட்ட விடத்தென்னுங்காலிரண்டு, நான்கு, எட்டு, பதினாறு இவ்வண்ணமாய்ம்முறையே அசை, இயல், உரி, பொது வெனச் சீர்நாமங் கொள்ளுமென்றார்;—தன்னொடும் பிறிதொடுமொன்றது தன்னொடு தானுந் தன்னொடு பிறிதும் பிறிதொடு பிறிதுமெனப்பொருள் கொள்க; நிரை, நேர அசைச்சீரிரண்டும், நேர்நேர், நிரைநேர, நிரைநிரை, நேர்நிரை என வியற்சீர் நான்கும்; நேர்நேர்நேர், நிரைநேர்நேர், நிரைநிரைநேர், நேர்நிரை நேர், எனவும், நேர்நேர்நிரை, நிரைநேர்நிரை, நிரைநிரைநிரை, நேர்நிரைநிரை என எட்டுரிச்சீரும் இவ்வெட்டோடு நேர்நிரை என இன்னுமொருகாறகூட்ட பொதுச்சீர் பதினாறாம் வந்தமை யுணர்க. மொழிப வென்றமையின் முனைமொழிந்தனவற்றை யோரசை, ஈரசை, மூவசை, நாலசைச்சீரெனப் பெயர்த்து வழங்குவரு முளரென்றறிதற்பாற்று.

தேமா புளிமா கருவிளங் கூவிளம்
வாய்ப்பாட் டகவலை வருங்கா யடைய
வெண்சீராகும் வஞ்சிக் காங்கனி
தண்பூ நறும்பூ தண்ணிழ னறுநிழ
லிப்பது கடையி னலசைச் சீரே. (௪)

இஃது தாரணவாய்ப்பாட்டாமா றுணர்த்துத னுதலி
ற்று;—எனனின்; தேமா, புளிமா, கருவிளம், கூவிளம, வா
யப்பாட்டசவற்சீராம்; இவற்றோடுகாய் சேர்ப்பின் வெண்
சீராம்; கனிசேர்ப்பின் வஞ்சியுரிச்சீராம்; தண்பூ, நறும்பூ
தண்ணிழல், நறுநிழல், எனமுறையே பிற்றினிற்பது நால
சைச்சீரமென்றார்: அகவலென்றது இயற்சீரினை:—

அசைச்சீரெல்லா மியற்சீரனைய. (கூ)

இஃது சீரொப்புமைநுதலிற்று:—என்னின்; அசைச்
சீரியற்சீர் போலமையு மெனறார்:—அசைச்சீர்நின்றுதன்வ
ருஞ்சீர்முதலசையோ டொன்றுவது ஆசிரியத்தளையும் ஒ
ன்றாதது வெண்டளையுமாமென்றுணர்க:

"உரிமையின்கண் ணின்மையால்
அரிமதா மழைக்கண்ணாள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற வென்பவே."

என்னும் வஞ்சி விருத்தத்தூண் மழை யெனுமசைச்சீரி
யற்சீர்போனின்று தன்வருஞ்சீர் முதலசையோடொன்றா
தியற்சீர் வெண்டளையாயதும், செய்யெனுமசைச்சீரொ
ன்றியகவற்றளையாயது முணர்க:—

பொதுச்சீரெல்லா மேனைப் பொதுவே (௪0)

இதுவுமது:—என்னின்; பொதுச்சீரனைத்து மற்றைய சீர்கள்போலமையுமென்றார்:—மற்றையசீர்களனைவேறிய ற்சீர்போற் பகுக்கப்படுதலானும், பூவிறுதிச்சீர் வெண்சீர் போற்கொள்ளப்படுதலானும், நிழலிறுதிவஞ்சிச்சீர்போற் கொள்ளப்படுதலானு மென்க:—

“அள்ளற் பள்ளத் தகன்சோ ணாட்டு
வேங்கை வாயில் வியன்குன் றூரன்”

என்னும் பாட்டினுளோரடியி லிரண்டுபொதுச்சீருள வேனுமது நான்கியற்சீராகப் பகுக்கப்பட்டமையும்;

“அங்கண்வானத் தமரரசரும்
வெங்களியானை வேல்வேந்தரும்
வடிவார்கூந்தன் மங்கையருங்
கடிமலரேந்திக் கதழ்ந்திறைஞ்ச
சிங்கஞ்சுமந்த மணியணைமிசைக்
கொங்கவிரசோகின் றுணிநிழற்கீழ்ச்
செழுநீர்ப்பவளத் திரள்காம்பின
முழுமதிபுரையு முக்குடைநீழல்
வெங்கண்வினைப்பகை விளிவெய்தப
பொனபுனைநெடுமதில் புடைவிளைப்ப
வனைந்து சதுட்டய மவையெய்த
கனைப்பிலையுலகுட னவைநீங்க

மந்தமாருத மருங்கசைப்ப
வந்தரத்துந்துபி நின்றியம்ப
விலங்குசாமரை யெழுந்தலமர
நலங்கிளர்பூமழை நனிசொரித—வினிதிருந்
தருநெறி நடாத்திய வாதிதன்
திருவடி பரவுதுஞ் சித்திபெறற்பொருட்டே."

என்னும் பாட்டினுள் முதற்கணாலசைச்சீர் பதினாறும் வெண்சீர், வஞ்சிச்சீர்போன்று தளைதட்டுவந்தவாறுணர்க. இப்பாட்டு சிந்தடிவஞ்சியாக்கொள்ளினும் வழுவாதென்க:—

தலைப்பெயச்சீர்க டளையாமத்தளை
வெண்பாவகவல் வஞ்சியாங்கலியே. (கக)

இஃது தளையாமாறுணர்த்துதனுதலிற்று:—என்னின்; சீர்கள்தலைப்பெய்திணைவது தளையாகும்; அதுவெண்டளை, ஆசிரியத்தளை, வஞ்சித்தளை, கலித்தளை என்று நான்குபாலினதென்றார்:—கலியேயெனவிறுதிக் கண்விதந்து தலைதடுமாறிக் கூறினமையென்னெனிற் கலித்தளைவெண்சீர் விகற்பமாதலினென்க.

தலைப்பெயுஞ் சீரசை தம்மிற்போல்வ
தொன்றியதளையா மல்லது விகற்பே. (கஉ

இஃதொன்றியதும் ஒன்றாததுமாய தளைகளையுணர்த்துதனுதலிற்று: என்னின்; நின்றசீரினீற்றசையும் வருஞ்சீரின்முதலசையுந் தம்முட்சாமிய முடைத்தே லொன்றினதளையென்றும் பேதமுளவாயின் விகற்பமுடைய தளையென்றாவது ஒன்றாத்தளை யென்றாவது கூறுவர்:—இஃது மேலைச் சூத்திரத்துட்காட்டுதும்:—

இயற்சீர் விகற்பு நேரீற்றுரியிணைவு
மியற்சீர் வெண்சீர் வெண்டளை யென்ப. (கரு)

இஃது வெண்டளையாமாறுணர்த்துதனுதலிற்று:—என்னின்; இயற்சீர்விகற்பு, தொன்றுதலும் நேரீற்றுரிச்சீரொன்று வதுமியற்சீர்வெண்டளையெனவும் வெண்சீர்வெண்டளையெனவு மிசைப்பரென்றார்:—

“கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.”

என்பதியற்சீர் வெண்டளையான் வந்த குறள்வெண்பா:—

“யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு,”

என்பது வெண்சீர்வெண்டளையான்வந்த குறள்வெண்பா:—

இயற்சீரிணைவ தாசிரியம்மே. (கசு)

இஃது ஆசிரியத்தளையாமாறுணர்த்துத னுதலிற்று:—
என்னின்; இயற்சீரொன்றுவது ஆசிரியத்தளையாமென்றவா: இத்தளை இயற்றளையெனவும், அகவற்றளையெனவும், ஆசிரியத்தளையெனவும் படுமென்க; "அகவலென்பதாசிரியப்பேரே" என்றாராகலின,—

"வாருறு வியிர்த்தனை வையக மனைத்தினை
பான்மதி விரித்தனை பல்லுயி ரோம்பினை
நீயிற வண்ணநின் னிறைசழ றொழுதனம்,"

என்பது, இயற்சீர்த்தளையான் வந்த ஆசிரியத்தாழிசை:—

நிரையீற்றுரிப்பகை நேர்வுமாம் வஞ்சியே. (கரு)

இஃது வஞ்சித்தளையாமாறுணர்த்துத னுதலிற்று:—
என்னின; நிரையசையிறுதியாகிய வுரிச்சீர், ஒன்றுவிடத்து மொன்றிடமும் வஞ்சித்தளையாம்:—

"பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்றிரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவு
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயலார்ப்பவும்—நாளும்,
மகிழு மகிழ்தூங் கூரன்
புகழ்த லானாப் பெருவண் மையனே?"

என்பது, வஞ்சித்தளையான் வந்த செய்யுள்: இது குறளடி வஞ்சிப்பா;

வெண்சீர் விகற்பங் கலித்தளை யாமே. (கசு)

இஃது கலித்தளையாமாறுணர்த் துதனுதலிற்று;—என்னின்; வெண்பாவுரிச்சீரொன்றுதது கலித்தளையாமென்றார்;—

"செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்,
எல்லைநீர் வியன்கொண்மூ விடைநுழையு மதியம்போன்,
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே,"

என்பது கலித்தளையான் வந்த கலிப்பா வாமாறுணர்க:

இரண்டுமூன்று நாலைந் தேற்றமாஞ் சீர்கள்
தளையக் குறள்சிந் தளவா நெடிலாக்
கழிநெடி லாகக் கண்டன ரடியே. (கஎ)

இஃது. அடியாமாறுணர்த்து தனுதலிற்று:—என்னின்; இரண்டு மூன்று நான்கு மைந்து மைந்தின் மிக்குஞ் சீர்கள் தளைந்து நிற்புழி யவை குறளடி, சிந்தடி, யளவடி, நெடிலடி, கழிநெடிலடி யென வாத லறிக வென்றார்;

"திரைத்த சாலிகை
நிரைத்த போனிரைந்
திரைப்ப தேனகளே
விரைக்கொண் மாலையாய்."

என்பது, குறளடியான் வந்த வஞ்சித்துறை:—

"இருது வேற்றுமை யின்மையாற்
சுருதி மேற் றுரக் கத்தனே
டரிது வேற்றுமை யாகவே
கருது வேற்றடக் கையினாய்."

என்பது, சிந்தடியான் வந்த வஞ்சிவிருத்தம்:—

"சேடிய வகலிகை சாபந்தீர்த்ததா
நீடிய வுலகெலா மளந்து நீண்டகா
ளோடிய சகடிற வுதைத்துப் பாம்பின்மே
லாடியுஞ் சிவந்ததா ளென்னை யாண்டதாள்.

என்பது, அளவடியான் வந்த கலிவிருத்தம்:—

"யானுந் தோழியு மாயமு மானுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேற்
கானும் புள்ளுங் கைதையு மெல்லாங் கரியன்றே."

என்பது, நெடியடியான் வந்த கலித்துறை:—

"ஆரண சற்பித மாதவவச்சுத வாழி யிடைத்துயிலுங்
காரண சிற்குண ரூப மலர்க்கொடி காதன் மனத்துறையும்
நாரண வற்புத வானவ ருக்கொரு நாயக நிற்பணியும்
வாரண முத்தி விசால தலத்திடை வாழ்வுற வைத்தவனே."

இஃது, அறுசீர்க்கழி நெடிலான்வந்த ஆசிரிய விருத்தம்.—

"மாதுலனாகிய மேதிலனாகியும் வஞ்சன் கஞ்சன் வரவிட்ட, பூதனை தன்னுயிர் முலைபொழி பாலொடு போதரவுண்ட புயல்வண்ணா, மாதவ யாதவ வாசவ கேசவ மாயா வாயாமதுருதா, வாதியு மந்தமு மாகிய நின்பத மல்லா துனையே னடியேனே."

இஃது, எழுசீர்க்கழி நெடிலான் வந்த ஆசிரியவிருத்தம்.—

"விக்கா வுக்கா வித்தாவிப்போய் விட்டானட்டார் கட்டீரா புக்கா, இக்கா யத்தா சைப்பாடுற்றே யிற்றே டிப்போய் வைப்பீர் சிறப்பீரா, ஆக்கா டப்பேய் தொக்கா டச்சூ பூப்பா டத்தீ வெப்பா டப்பூண், நெக்கா டக்கா னத்தா டப்போ நெய்த்தா னெந்தா னைச்சே வித்தே."

இஃது, எண்சீர்க்கழி நெடிலான் வந்த ஆசிரிய விருத்தம்:—

"இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியி னெதிர்ந்த தாரையை யிலங்கு மாழியின விலங்கியோன், முடங்கு வாலுளை மடங்கன் மீமிசை முனிந்து சென்றுடன் முரண்ட ராசனை முருக்கியோள், வடங்கொண் மென்முலை நுடங்கு நுண்ணிடை மடந்தை சுந்தரி வணங்கொள பூமழை மகிழ்ந்தகோன், தடங்கொ டாமரை யிடங்கொள்சேவடித் தலைக்கு வைப்பவர் தமக்கு வெந்துயர் தவிர்க்குமே."

இஃது ஒன்பது சீர்க்கழி நெடிலான் வந்த ஆசிரிய விருத்தம்.

"கொங்கு தங்கு கோதையோதி மாதரோடு கூடி நின்று மோடை நெற்றி, வெங்கண் யானை வேந்தர் போந்து வேதநாத வென்று நின்று தாழ, வங்க புங்க மாதியாய வாதி நூலி னீதி யோது மாதி யாய, செங்கண் மாலை காலை மாலை சென்று சேர்வர் சோதிசேர்ந்த சித்தர்தாமே."

இஃது பதின்சீர்க்கழி நெடிலான் வந்த ஆசிரிய விருத்தம்.

பதின்சீரின் மிக்கு வருவன வந்தழிக்கண்டு கொள்க; அவை சிறப்பில வென்பது தொல்லாசிரியர் துணிவு.

முந்தி யுரைப்ப மொழியும் பொருளுந்
சந்த நோக்கிச் சாத்தனை யொண்டையோ. (கஅ)

இஃது தொடையிலக்கண முணர்த்துதனுதலிற்று: என்னின்; முன் மொழிந்த வெழுத்து, அசை, சீர் இவையும் சொல்லும், பொருளும், ஆயவிவையனைத்துஞ் செமமையிற்றொடுப்பது தொடையாமென்றார்.

முதல் வழியெழுத்து முரணிய சொல்லும்
விதமீறளபெடை விதப்பு முன்னிறுதியும்
பாதசசொறகளும் பாவல ரேய்ப்ப
மோனை யெதுகை முரணியை பளபெடை
யேனை யந்தாதியோ டிரட்டையாமே. (சுகூ)

இஃது தொடைவேறுபாடுணர்த்து தனுதலிறறு:— என்னின; முதலெழுததும், இரணடாமெழுததும, முரணை சொறகளும், விதமாமிறுதி யெழுததும, அளபெடையும, முனமொழியிறுதியைப் பின்னர்விதந்தெடுததலும், ஓாடியிலுளள சொறகளும் தம்முட்பொருநதுமாறு கவிஞா சேர்ப்பதானமுறையே மோனை, எதுகை, முரண, இயைபு, அளபெடை, அநதாதி, இரட்டையாகிய தொடைகளாம எனறார்.

"மாவும் புள்ளும் வதிவயிற் படா
மாநீர் விரிநத பூவுங் கூம்ப
மாலை தொடுதத கோதையுங் கமழ
மாலை வந்த வாடை
மாயோ ளின்னுயிர்ப் புறத்திறுத் தற்றே."

இவ்வாசிரியத்துளடி தொறுமுதலெழுத்தொன்றியடி மோனையாயதறிக.

"வடியேர்கண் ணீர்மல்க வான்பொருட்கட் சென்றார்
கடியார் கனங்குழாய் காணார்கொல் காட்டின்
இடியின் முழக்கஞ்சி யீர்ங்கவுள் வேழம்
பிடியின் புறத்தசைத்த கை."

இவ்வெண்பாவி னடிதொறு மிரண்டாமெழுத்தொன்றியடியெதுகையா யதுணர்க.

"இன்னகைத் துவர்வாய்க் கிளவியு மணங்கே
நன்மாமேனிச் சுணங்கு மாரணங்கே
ஆடமைத் தோளி கூடலு மணங்கே
அரிமதர் மழைக்கணு மணங்கே
திருநுதற் பொறித்த திலதமு மணங்கே."

இவ்வாசிரியத்து ளிறுதி யிசைதலினடியியை பெனவுணர்க.

"இருள் பரந்தன்ன மாநீர் மருங்கில்
நிலவு குவித்தன்ன வெண்மண லொருசிறை
இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னி னன்ன நுண்டா திறைக்குஞ்
சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணு முடையவா லணங்கே."

இவ்வாசிரியத்துண் முதன்மொழி முரண்படத்தொடுத்தலினடி முரணுமாறுணாக.

"ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்று மவா."

இவ்வெண்பாட்டுண் முதலெழுத் தளபெழுந்தமையி னளபெடை யாமாறுணர்க.

"உலகுடன் விளக்கு மொளிதிகழவிர்மதி
மதிநலனழிக்கும் வளங்கெழு முகத்துடை
முக்குடை நீழற பொற்புடை யாசனம்
ஆசனத்திருந்த திருந்தொளி யறிவன்
ஆசனத்திருந்த திருந்தொளி யறிவனை
யறிவுசே ருள்ளமோ டருந்தவம புரிந்து
துனணிய மாதரீதெனப்
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை யுலகே."

இவ்வாசிரியத்து ளடிதொறு மிறுதிமுதலாகத் தொடுத்தந்தாதியாய தறிக.

"ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்
விளக்கினிற் சீறெரி யொக்குமே யொக்குங்
குளக்கொட்டிப் பூவி னிறம்."

இவ்வெண்பாவி னோரடியி லோர் சொல்லே வாரத் தொடுத்திரட்டையாய துணர்க.

ஆதியாமத்தொடை யாய்க்கிடு மெல்லை
பாதத்தாயினு முதலோ டொன்று
மிடையிட் டொன்று மீறு மிரண்டு
மொன்றீற்றயலிஃ தொழிபு.மனைத்துஞ்
சீாகளிலேனுஞ் சிறந்து நடப்புழிப்
பாத மிணையே பொழிப்பொ டொரூஉக்
கூழை மேறகீழ்க் கதுவாய் முற்றும். (உ௰)

இஃது, தொடைவிகற்பங் கூறுதனுதலிற்று; என்னின், முன் மொழிந்தவற்றுண் முதலைநத தொடையு மாராயு மிடத்து அடிககண் முதலாயினும் முதலோடிரண்டாஞ் சீரினும், முதலோடு மூன்றுஞ்சீரினும், முதலோடிறுதிச்சீரினும், மூதன்மூனறு சீரினும், முதலோடயலொன்றொழிந்த சீரினும், ஈற் றயலொழிநத சீரினும், சிறந்து வருமிடத்து அடி, யிணை, பொழிப்பு. ஒரூஉ, கூழை, மேற்கதுவாய். கீழ்ககதுவாய், முற்று என ஒவ்வொன்றும் விசற்பிக்க அடி மோனை முதலிய வைந்து தொடையும், இணை மோனை முதலிய முப்பத்தைந்து தொடை விகற்பமு மாமா றுணர்க.

"அணிமல ரசோகின் றளிர்நலங் கவற்றி
அரிற்குரற் கிண்கிணி யரற்றுஞ் சீரடி
அம்பொற் கொடிஞ்சி நெடுந்தே ரகற்றி
அகன்ற வங்க மருநுண் மருங்குல்
அரும்பிய செங்கை யவ்வளை யமைத்தோள்

அவிர்மதி யனைய திருநுத லரிவை
அயில்வே லனுக்கி யம்பலைத் தமர்ந்த
கருங்கய னெடுங்க ணோக்கமென்
திருந்திய சிந்தையைத் திறைகொண் டனவே.''

இவ்வாசிரியத்து ளடி மோனையல்லாது ஒவ்வொரு அடியின்க ணுள்ள சீர்களிலும் மோனைதொடுக்க இணைமோனை, பொழிப்புமோனை, ஒரூஉமோனை, கூழைமோனை, மேற்கதுவாய்மோனை, கீழ்க்கதுவாய்மோனை, முற்றுமோனை என விகற்பித் தொடைறினமை யுணர்க.

“பொன்னினன்ன பொறிசுணங் கேந்திப்
பன்னருங்கோங்கி னன்னலங் கவற்றி
மின்னிவ ரொளிவடந் தாங்கி மன்னிய
நன்னிற மென்முலை மின்னிடை வருத்தி
யெனையு மிடுக்கண் டுன்னுவித் தின்னடை
யன்ன மென்பெடை போலப் பன்மலர்க்
கன்னியம் புன்னை யின்னிழற் றுன்னிய
மயிலே சாயல் வாணுதல்
அயில்வே லுண்கணெம் மறிவுதொலைத் தனவே.''

இவ்வாசிரியத்துளெதுகை முற்கூறிய போல்விகற்பித் தமையறிக.

“சீறடிப் பேரொழிலாக மொல்குபு
சுருங்கிய நுசுப்பிற் பெருகு வடந்தாங்கிக்

முகிழ்த்து சுணங்கரும்பிய செங்கை விசிந்து
சிறிய பெரிய நிகாமலர்க் கோதைதன்
வெள்வளைத் தோளுஞ் சேயரிக் கருங்கணும்
இருகையு நிலையு மேந்தெழி லியக்கமும்
துவர்வாய்த் தீஞ்சொலு முவந்தெனை முனியாது
என்று மின்னணை மாகுமதி
பொன்றிகழ் நெடுவேற் போர்வல் லோயே."

இவ்வாசிரியத்துண் முதற்கூறியவாறு முரண்விகற்பித்து வந்தமையுணர்க.

"மொய்த்துடன் றவழு முகிலே பொழிலே
மற்றதனயலே முத்துறழ் மணலே
நிழலே யினியத னயலது கடலே
மாதர் துகிலே செல்லே யியலே
வில்லே நுதலே வேர்ககண் கயலே
பல்லே தளவம் பாலே சொல்லே
புயலே குழலே மயிலே யியலே-அதனால்,
இவ்வையி னிவ்வுரு வியங்கலின்
எயவையி னோருரு மிழப்பர்தந் நிறையே."

இவ்வாசிரியத்துண் முதற்கூறியவாறு இயைபு விகற்பித்து வந்தமை யுணர்க.

"தாஅட் டாஅமரை மலருழக்கி
பூஉக் குவளைப் போது தருந்திக்

காஅய்ச் செந்நெற் கரித்துப் போஒய்
மாஅத் தாஅண் மோஒட் டெருமை
தேஎம் புனலிடைச் சேஒர் பாஅல்
மீஇ றாஅர்ந் துகஉஞ் சீஇர்
ஏஎ றாஅ நீஇ ணீஇர்
ஊரன் செய்த கேண்மை
ஆய்வளைத தோழிக லரா றாவே."

இவ்வாசிரியத்துண் முற்கூறியவாறு, அளபெடை விக ற்பித்தமை யறிக.

முந்தின சந்த முழுதொவ் வாதது
செந்தொடை யென்னச் செப்பினர் புலவர். ( ௯)

இஃது செந்தொடை யுணர்த்துதனுதலிற்று:—என்னெனி ன்; முந்தின தொடையுந் தொடை விகற்பமும் பொருந்தா வருவன செந்தொடையாகக் கொண்டாரென்றார்.

"பூத்த வேங்கை வியன்சினை யேறி
மயிலின மகவு நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே."

இவ்வாசிரிய முதாரண மெனக்கொள்க.

# செய்யுளியல்.

---

வெண்பா வகவல் கலியே வஞ்சி
பண்பாய்ந் துரைத்த பாநான் காமே. (௨௨)

இஃது முன்னுறுப்பாலிசையும் பாவின் பெயர் வேறுபாடுணர்த்துதனுதலிற்று:—என்னின்; வெண்பா, ஆகவல், கலிப்பா, வஞ்சிப்பாவென விளங்கிய பெயர்த்த பாநான்காமென்றார்; பண்பாய்ந்துரைத்த வென்பதைப் பண்பு ஆய்ந்து உரைத்த எனக்கொண்டு தன்மைநோக்கி யுரைத்த பாய்ப் பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர, வருணம்போலுரைத்தாரெனவும்; பண் பாய்ந்துரைத்த எனக்கொண்டு ஓசை வேறுபாடு பற்றி, செப்பல், அகவல், துள்ளல், தூங்கலென்று மிசைநோக்கி யுரைத்தாரெனவும் பொருளமைபுற. நான்காமே என்றது தேற்றப்பொருளான் முன்மை பற்றி யெனக் கொள்க. இச்சூத்திர மேற்கோளாகவிற் றெடுத்து மொழிதலென்னு முத்தி.

வெண்டளை தட்டுச் செப்பலோசைத்தாய்ப்
பண்டை யளவடி சிந்தடியா வெண்பா. (௨௩)

இஃது வெண்பாவாமா றுணர்த்துதனுதலிற்று:—என்னின்; வெண்டளை விரவிச் செப்பலோசை குன்றாது அள

நாள், மலர், காசு, பிறப்பு, என்னும் வாய்ப்பாட்டான் கடைச்சீரிறுவன குறள்வெண்பா வென்றார்:—மொழிந்த வீரடியென்பது முற்கூறிய வளவடியுஞ் சிந்தடியுமாயவிரண்டினை. தோமறு என்றது வாய்ப்பாட்டு இரியின்மையி னென்றுணர்க.

"பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்." எனவும்,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்." எனவும்,

"யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு." எனவும்,

"உருவுகண் டெள்ளாமைவேண்டுமுருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து." எனவும்,

வந்தமை யுணர்க.

இரண்டு குறளி னிடைவான் றனிச்சொலு
மோரிரு விகற்பு மொன்றியி னேரிசை. (௨௫)

இஃது நேரிசை வெண்பாவிலக்கண முணர்த்துதனு
தலிற்று:—என்னின்; இரண்டு குறள்வெண்பாக்களி னிடை
யினை முதற்றொடைக்கேற்ற தனிச்சொல்லா லடிநிறைந்து

ஒருவிகற்பமாயு மிருவிகற்பமாயும் வருவது நேரிசை வெண்பா வென்றார்:—வான் றனிச்சொல்லெனக் கூறியது முதற்றொடைக்கேற்ற றனிச்சொலென வுணர்த்தற்கென்க; ஒன்றனை நேரிசை யென்றது முதற்குறள் வெண்பாவி னிறுதி யசைச் சூத்திர வாய்ப்பாட்டா னிறுமெனினும், அசை சொற்றாசிட்டு விளக்கிய போற்றோகிறைந்து வருவன வாசிடை யிட்ட நேரிசை யென்றறிதற்கென்க.

"அரிய வரைநீண்டு காட்டுவார் யாரே
பெரிய வரைவயிரங் கொண்டு—தெரியிற்
கரிய வரைநிலையார் காய்ந்தாலென் செய்வார்
பெரிய வரைவயிரங் கொண்டு."

"நடமண்டு தாமரையின் றாதாடலவன்
இடமணைடிச் செல்வதனைக் கண்டு—பெடைநெருண்டு
பூழிக் கதவடைக்கும் புதூரே பொய்கடிந்
தாழி நாடாயினா ரூரா."

இவை யொருவிகற்பானு மிருவிகற்பானும் வந்த நேரிசை வெண்பா.

"புலனைந்துந் தானே பொரமயங்கிச் சிந்தை
யலமந்து புழுவு மடிமை—நலமிகுந்த
சிந்தானை யோனைச் சிவனைநின் சேவடிக்கே
பிந்தானு முண்டோ பிறப்பு."

"காதலியைக்காரிருளிற் கானகத்திற் கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாத
மளிக்கிறை வாழிவா யாங்கலவ னோடி
யொளிக்கின்ற தென்றோ வுரை."

இவற்றுளேழாஞ் சீரசைச்சீராய் முடிகவென்னுமேற்கோளுளதாயினு மவ்வசையோ டொன்றுமிரண்டு மசைகள் கூடியிறுதி விளக்காவந்தமையின், ஆசிடையிட்ட நேரிசை வெண்பாவாயதுணர்க.

தனிச்சொல்லல தின்னிசையாகும்மே. (உகூ)

இஃது இன்னிசை வெண்பா விலக்கண முணர்த்துதனுதலிற்று:—என்னின்; தனிச்சொற்பெறாதடி நிரம்பிவருவதினின்னிசை வெண்பாவென்றார்:—ஈண்டு தனிச்சொலென்றது மேலைச் சூத்திரத்துள் மொழிந்தவாற்றினதெனவுணர்க. அத்தகைத் தனிச்சொல்லலவெனவன்மைப்பொருள் கொண்டமையின் வேறு தனிச்சொல் வரப்பெறுமெனபதூஉம், இதனை வரும்மெனு மோத்திலாமையின் முன்றடியினும் வரப்பெறு மெனபதூஉம், ஆகும்மேயென்று மிகுத்துச் சொன்னமையானும் விகற்பவரையறை கூறாமையானு மனைத்து விகற்பத்தாலும் வருமென்றாராயிற்று. என்னை;

"ஒருவிகற் பாகித் தனிச்சொ லின்றியு
மிருவிகற் பாகித் தனிச்சொலின்றியுந்
தனிச்சொற் பெற்றுப் பலவிகற் பாயுந்

தனிச்சொ லின்றிப் பலவிகற் பாயு
மடியடி தோறு மொரூஉத்தொடை யெனவு
மெனவைந் தாகு மினனிசை தானே."

என்றார் பிறருமெனக்கொள்க.

"தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன்
வேளாள னென்பான் விருந்திருக்க வுண்ணாதான்
கோளாள னென்பான் மறவாதா னிம்மூவர்
கேளாக வாழ்த லினிது."

இது தனிச்சொல்லின்றி யொரு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

"நாற்ற முரைக்கு மலருண்மை கூறிய
மாற்ற முரைக்கும் வினைநலந் தூக்கின
அகம்பொதிந்த தீமை முகனுரைக்கு முன்னம்
முகம்போல முன்னுரைப்ப தில்."

இது தனிச்சொலின்றி யிருவிகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

"கோனோக்கி வாழுங் குடியெல்லாந் தாய்முலை
பானோக்கி வாழுங் குழவிகள்—வானத் [யினை
துளிநோக்கி வாழு முலக முலகின்
விளிநோக்கி யின்புறூஉங் கூற்று." எனவும்,

"வளம்படவேண்டாதார் யார்யாரு மில்லை
யளந்தனபோக மவரவ ராற்றான்
விளங்காய் திரட்டி னாருமில்லை—களங்கனியைக்
காரெனச் செய்தா ருமில." எனவும்,

"இன்னாமை வேண்டி னிரவெழுக—விந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக—தன்னொடு
செல்வது வேண்டி னறஞ்செய்க—வெல்வது
வேண்டின் வெகுளி விடல்." எனவும்,

தனிச்சொற்பெற்றுப் பலவிகற்பான வந்தமை யுணர்க.

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்." எனவும்,

"மழையின்றி மாநிலத்தார்க் கில்லை—மழையுந்
தவமிலா ரில்வழி யில்லை—தவமும்
அரசிலா ரில்வழி யில்லை—யரசனும்
இல்வாழ்வா ரில்வழி யில்." எனவும்,

இவையும் ஒரூஉத்தொடைகள் பெற்றுவந்தமை யறிக.

பாதம் பலவரிற் பஃறொடை யாமே. (உஎ)

இஃது பஃறொடை வெண்பா வாமா றுணர்த்துதனுத லிற்று. என்னின்; பல வடிகளான வருவது பஃறொடை

யாகு மென்றார். பாதம் பலவரின் என்றது, நாலடியின் மிகத்து வருவது என்பதுபோந்த பொருளெனக் கொள்க. ஆமே என்று மிகைபடக்கூறினதென்னையெனின், எழுடியின் மிக்கு வருவன சிறப்பின்றென்பதூஉம், செப்பலோசைகுன்றி வருவன வுளவேல் வெண்கலியா மென்பதூஉமுணர்த்தற்கெனக. தனிச்சொலும் விகற்பமும் கூறாமையின், தனிச்சொற் பெற்றும் பெறாது மொன்றும் பலவும் விகற்பத்தான் வருமெனக் கொள்க. ஈண்டொன்றும் பலவும் என்றது தமிழ்நூற்கொள்கை: என்னை;

> "ஒன்றல்லவை பலதமிழ் நடைவட நூ
> லிரண்டல் லவைபல வென்றிசினோரே."

என்றதனானுணர்க.

> "சேற்றுக்கா னீலஞ்செருவென்ற வேந்தனைவேல்
> கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொருகயற்
> சேற்றுந் தொழில்வடிவு தம்முட் டம்மாற்றம்
> வேற்றுமை யின்றியே யொத்தன மாவேடா
> ஆற்றுக்கா லாட்டியர் கண்."                    எனவும்,

> "பண்மாடக் கூட மதுரை நெடுந்தெருவில்
> என்னோடு நின்றா ரிருவ ரவருள்ளும் [னோடைக்
> பொன்னோடை நன்றென்றா ளல்லளோ பொன்னா
> டியானைநன் றென்றாளு மந்நிலையள்—யானை,
> எருத்தத் திருந்த விலங்கிலை வேற்றென்னன
> திருத்தார்நன் றென்றேன் றியேன."     எனவும்,

"வையக மெல்லாங் கழனியா—வையகத்துட்
செய்யகமே நாற்றிசையின தேயங்கள்—செய்ய
கத்துள்
வான்கரும்பே தொண்டை வளநாடு—வானகரு
ம்பின
சாறேயன் னாட்டிற் றலையூர்கள்—சாறட்ட
கட்டியே கச்சிப் புறமெல்லாம்—கட்டியுட்
டானேற்ற மான சருக்கரை மாமணியே
யானேற்றான் கச்சி யகம்." எனவும்,

தனிச்சொற்பெற்றும் பெறாதும் பலவாய் விகற்பித்து, ஐந்து, ஆறு, ஏழு, எனனுமடிகளால் வந்தவாறுணாக.

நேரிசையின்னிசையன மூவடிசிந்தே. (உ-அ)

இஃது நேரிசைச்சிந்தியல் வெண்பாவு மின்னிசைச் சிந்தியல் வெண்பாவுமா மாறுணர்த்துதனுதலிற்று:—என னின:—

நேரின்னிசைபோல மூன்றடியான் வருவது நேரிசையும், இன்னிசையுமாய சிந்தியல் வெண்பாககளாம்,என்றுா:

"அறிந்தானை யேத்தி யறிவாங் கறிந்து
சிறந்தார்க்குச் செவ்வனுரைப்ப—சிறந்தார்
சிறந்தமை யாராய்ந்து கொண்டு."

"நற்கொற்ற வாயி னறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தாளே—பொற்றே
பாலைநல் வாயின் மகள்.". [ராண்

என, நேரிசைச்சிந்தியல்வெண்பா வந்தமையுணர்க

"நறுநீல நெய்தலுங் கொட்டியுந் திண்டிப்
பிற நாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரினில்
அறநாட்டுப பெண்டி ரடி."

"சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை."

என, இன்னிசைச்சிந்தியல் வெண்பா வந்தமை யுணர்க.—

மேலைப்பா வினமேற்கு மியற்றளை
கலியும வஞ்சியுங் குறுகுமாந்துறைக்கே. (உ௬)

இஃது, மேற்கூறிய வெண்பாவினத்தி னிலக்கணங் கூறுதலுற்று. எனனின; மேலைப்பாவினங்கள் முன்மொழிந்த வெண்டளையலாது இயற்றளையுமேற்றுவரும்; வெண்டுறைநகளன் கலித்தளையும் வஞ்சித்தளையு மருகி வரப்படுமென்றார்.

இவற்றிற்குதாரண மேலைச் சூத்திரத்துட்காட்டுதும்.

## அந்தமில் லளவிரண் டொப்பது செந்துறை (௨௰)

இஃது, குறட்பா வினமாகிய செந்துறையிலக்கணநுதலிற்று:—என்னின்; அந்த மில்லாத வளவடி யிரண்டுதம்முளொத்து நிற்பது வெண்செந்துறை யென்றும், செந்துறை வெள்ளையென்றும் வழங்கப்படு மென்றார். அந்தமில்லென்றதனாலொழுகிய வோசையும் விழுமிய பொருளுமெனக் கொள்க; ஒப்பது செந்துறை யெனவே யொவ்வாது சிதைந்துவருவது குறட்டாழிசையா மென் றுணர்தற்கென்க:—

" ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லா [ம்.
மோதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை." எனவு
" கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை [ம்,
யென்று மேத்தித் தொழுவோ மியாமே." எனவு
வந்தமை யுணர்க.

ஈரடி யாகி யெனைத்துச் சீரினு
மீறு குறைந்தே யிறுங்குறட் டாழிசை. (௨௧)

இஃது, குறட்பாவினமாகிய குறட்டாழிசை யிலக்கணநுதலிற்று:—என்னின்; இரண்டடியாயும, எவ்வளவு சீராலும் வரப்பெறறு இறுதி சீர்குறைநது வருவது குறட்டாழிசை யென்றார்:—குறைந்தே யென்றமையாற குறை

யாது வராவெனக்கொள்க:—ஈறுகுறைந்தே யென்றமை யான முச்சீரடியிற்குறையாதெனக.

"நண்ணு வார்வினை நைய நாடொறு நற்றவர்க்
கர சாய ஞானநற்
கண்ணினு னடியே யடைவார்கள் கற்றவரே."
எனவும்,

"நீல மாகட னீடு வார்திரை நின்றபோற்பொ
ங்கிப் பொனறு மாங்கலை,
காலம் பலகாலஞ் சென்றுஞ் செல்வர் யாக்கை
கழிதலுமே,, எனவும்,

ஈற்றடி குறைந்து இரண்டடியாய்ப் பலசீரான் வந்தமை யுணர்க:—

"பிண்டியி னீழற் பெருமான் பிடர்த்தலை [ம்,
மண்டலந் தோனறு மால்வாழி யனலுய்."எனவு
"வண்டார் பூங்கோதை வரிவளைக்கைத் திருநு
தலாள்
பண்டைய ளல்லள் படி." எனவும்,

ஒழுகிய வோசையின்றிய வெண்செந்துறையும், செ பபலோசைகுன்றிய வெணபாவுங் குறட்டாழிசைக் கணு டற்றிக.

மூன்று முதலே முடிகளிற் கடைசேய்ந்
தான்றசீரனைத்தினுமடிகொளும்வெண்டுறை.(௩௨)

இஃது, வெண்டுறை யிலக்கண நுதலிற்று:—என்னின்; மூன்றடிச்சிறுமையு மேழடிப் பெறுமையும்பெற்று இறுதி சிலகுறைந்து, சீர்வரையின்றி யடிநிரம்பிக்கொள்வது வெண்டுறையாமென்றவாறு:—ஆன்றசீரெனச்சிறப்பித்த தனான், வேற்றொலிவிரவு மெனவும், ஈறு ஒருசீர்குறைந்து வருவனவுமுண்டெனவு முணர்தறகென்க: ஆன்றசீரனைத்தினுமென்றமையான் இறுதி முச்சீராமிலக்கணத்துள் வழுவாதென்க:—

"தாளாள ரல்லாதார் தாம்பல ராயக்கா லென்னு மென்னும்
யாளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
பீலிபோற் சாய்ந்துவிழும் பிலிற்றி யாங்கே."
எனவும்,
"முழங்குதிரைக் கொற்கை வேந்தன் முழுதுலகு மேவல்செய முறைசெய்கோமான்
வழங்குதிறல் வாண்மாறன் மாச்செழியன் றக்கரிய வைவேல் பாடிக்
கலங்கினின் றொலாங் கருதலா காவணம்
இலங்குவா ளிரண்டிறு லிருகைவீ சிபபெயர்ந்

தலங்கன்மா லையவிழ்ந் தாடவாடுமிவள்
பொலங்கொள்பூந் தடங்கட்கே புரிந்துநின்று
[ரெலாம
விளங்கியுள் ளந்தப விளிந்துவே றுபவே." என
வும்,

வந்தமை யலகிட்டுணர்க; நான்கும், ஐந்தும், ஆறும், அடிகளான் வருவன வந்துழிக் கண்டுகொள்க.

ஈரள வோர்சிந் திணைவதொண் டாழிசை. (௫௫)

இஃது, வெண்டாழிசையல்லது வெள்ளொத்தாழிசை யிலக்கண நுதலிற்று — என்னின்; அளவடியிரண்டுஞ் சிந்தடி யொன்றுமா யிணைந்து வருவது வெண்டாழிசை யென்றார்:— ஓரளவாய் மூன்று சிந்தியல் வெண்பாக்க ளோர்பொருண் மேலிணைந்து வருவது வெண்டாழிசையா மென்றார்; இப்பொருள், இணைதாழிசை யென்பதாலு முணரற்பாற்று:—

"நண்பி தென்று தீய சொல்லார்
முன்பு நின்று முனிவு செய்யார்
அன்பு வேண்டு பவர்." எனத்தனித்தும்,
அன்று யுறங்கொ ளலங்கிளர் சேட்சென்னி
ஒன்று றுடைப்புறம் போல நலங்கவர்ந்து
துன்றுன் றுறந்து விடல்."

“ஏடி யறங்கொ னலங்கிளர் சேட்சென்னி
கூடா ருடைப்புறம் போல நலங்கவர்ந்து
நீடான் றுரந்து விடல்;”

பாவா யறங்கொ னலங்கிளர் சேட்சென்னி
மேவா ருடைப்புறம் போல நலங்கவர்ந்து
காவான் றுறந்து விடல்.”

எனச்சிந்தியல் வெண்பா வொருபொருண் மேன்மூன்றடுசகியும் வந்து வெண்டாழிசையாமாறறிக.

மூன்றடி யானு முடிந்தவ் வடிதொறுந்
தாந்தனிச் சொற்பெறுந் தண்டாவிருத்தம். (௩௪)

இஃது வெளிவிருத்தத்தி னிலக்கண முணர்த்துத னுதலிற்று :— என்னின்; மூன்றடியினானு முடிவுபெற்று, அடிதோறு மிறுதிக்கண்ணோர் தனிச்சொலைச் சார்ந்துவருவது வெளி விருத்தமென்றார். மூன்றடியானு மென்றவும்மையா னான்கடியாய் வரப்பெறுமாயினு மெனக்கொள்க; தாந்தனிச்சொலெனச் சிறப்பித்ததனாற் றனிச்சொற்றனேயாகி யெனவும், தண்டாவென்றமையாற்றனிச்சொல் நாற்சீரின புறமே யெனவு முணர்த்தற்கென்க :—

“கொண்டன் முழங்கினவாற் கோபம் டறந்தனவா — லென்
[செய்கோயான்

வண்டு வரிபாட வார்தளவம் பூத்தனவா - லென்செய்கோ
[யான்

எண்டிசையுந் தோகை யிருந்தகவி யேங்கினவா - லென்
[செய்கோ யான்."

எனமுன்றடியாயும்;

"ஆவாவென்றே யஞ்சின ராழ்ந்தா - ரொருசாரார்
கூகூவென்றே கூவிளிகொண்டா - ரொருசாரார்
மாமாவென்றே மாய்ந்தனர் நீந்தா - ரொருசாரார்
ஏசீர் நாகி ரென்செய்து மென்றா - ரொருசாரார்."

என நான்கடியாயும் வந்தமை யுணர்க:—
நிரை நடு வஞ்சி நீங்கின சீரொடு
மறைகுறள் சிந்தோடளவடி பயின்று
மகவ லோசைத்தன வாசிரியம்மே. (௩௫)

இஃது "பா நானகாமே" யென்றதுளாசிரியப்பாவி லக்கண முணர்த்திற்று:— என்னின்; நிரையசை நடுவில் வாராத வஞ்சி யுரிச்சீரொழிந்த சீரோடுங், குறள், சிந்து அளவு முதலிய வடிகள விரவியும், அகவலோசையுடைத் தாயும் வருவன வாசிரியப்பா வென்றார்.

அகவலோசை மூன்று திறத்தன பின்வரும் யாப்ப லுணர்க :—

"நேர்நேரியற்றளை யான்வருமகவலும்
நிரைநிரையியற்றளை யான்வரு மகவலும்
ஆயிருதளையு மொத்தாகிய வகவலும்
ஏந்த றாங்க லொழுக லென்றிவை
ஆய்ந்தநிரைநிரையாகுமெனப."

என்றாராகலின நிரை நடுவஞ்சி நீங்கின சீரோடென்றமை யானயற்றளையுஞ்சிறுபான்மை புல்லுமென்று ராயிற்று.

நெடிலடி யகவலி னிகழ்ந்தது வரையார். (௩௬)

இஃது ஆசிரியப்பாவி னடியொழிபு கூறுத னுதலிற்று:—என்னின்; ஒரு சார்நெடிலடி யாசிரியத்துள் நிகழ்ந்து வரவுடைமை யாசிரியத்தினின்று வேறுபடுத்தினரல்லர் புலவர், எனறூர். ஆகலின, நிகழ்ந்தது, எனவே, முன்னிகழ்ந்தவை வரையாரென்றலது நிகழினும் வரையாரெனப்பொருள் கொளினிழுக்காமென்க. இஃது, இறந்தது விலக்கலெனுமுத்தி.

ஈறயற் சிந்துள விடைசில குன்றுப
வேற்றுக் குறைவுள வேலுமா றடியுள
நேரிசை யிணைக்குற ளிலேமண் டிலமடி
மறிமண் டிலமென மாட்டின ரன்றே. (௩௭)

இஃது ஆசிரியப்பாவின் வேறுபாட்டிலக்கண முணாத்துத லவற்றின் பெயரும், நுதலிற்று:—என்னின்; ஈற

றயற் சிந்தடியாவதூஉம், இடைக்கண் சிலவடி சில சீர் குறைந்துவருவதூஉம், ஏற்றமுங் குறைவுமின்றி யடியள வொத்துவருவதூஉம், பொருட் சிதைவின்றி யடிகள் தம் முண் மாறப்பெருவதூஉம், முறையே நேரிசை யாசிரியம், இணைக்குறளாசிரியம், நிலைமண்டிலவாசிரியம், அடிமறி மண்டிலவாசிரியம், எனப்பெயாத்தன வொன்றாயிற்று :— அடிவரையறை கூறுமையினெனைத் தடியானும் வரப்பெறு மெனக்கொள்க; அனறே என்ற மிகையான், ஏ, ஓ, ஈ; ஆ, என், என்பன விறுதியாவருவது சிறப்புடைத்தெனக.

"அகவலிசையன வகவன் மற்றவை, ஏ ஓ ஈ ஆ என் னை யென்றிறுமே" என்றாகலின :—

நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைககு நாடனொடு நட்பே."

என்றது, கடையடியினயல் சிந்தடியாகலின் நேரிசையா சிரியப்பா வாயிற்று;

" நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து
தீரத் தீருஞ்
சார னாடன கேண்மை

சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல்லாதே.”

என முதலடியுங் கடை யடியும், நான்கு சீராய் மற்றைய விடைக்க ணிருசீரானு முச்சீரானும் வந்த விணைக்குறளாசிரியப்பா :—

“சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானும்
நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானும்
நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லாம்
எமக்கீயு மன்னே
அம்பொடுவேனுழை வழியெல்லாம்
தானிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையால்
புலவு நாறு, மென்றலை தைவரு மன்னே
அருங்கலை யிரும்பா ணரகன்மண்டைத் துளை
யுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பார்வை சோர
அஞ்சோ னுண்டேர்ச்சிப் புலவர் நாவிற்

சென்று வீழ்ந்தன்றவன்
திருநிறத் தியங்கிய வேலே
அரசற் சென்னை யாண்டுளன்கொல்லோ
இனிப்பாடு நருமில்லை
பாடுநருக் கொன்றீகுனருமில்லை
பனித்துறைப் பகன்றை நறைகொண்மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பலவே."

என, விடையிடையே விருசீரடியானு முச்சீரடியானும் வந்த விணைக்குறளாசிரியப்பாவா மாறுணர்க.

" வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார லாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கிவ
ளுயிர்தவச் சிறிது காமமோ பெரிதே."

என, அடியனைத்தும் நாற்சீரா யொத்து முடிதலின் நிலைமண்டிலவாசிரியப்பா வாமாறுணர்க:—

" சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரா மகளி ராரணங் கினரே
வாரா லெனினே யானஞ் சுவலே
சார லாட நீவர லாறே."

என, மொழிந்த வடிகளைத் தலைதடுமாறிக் கூறினு மோசை யும் பொருளும் வழுவாமையின், அடிமறிமண்டிலவாசிரி யப்பா வாமாறுணர்க.

மூன்றள வொத்தமுக் கோவையுந் தாழிசை. (௩௮)

இஃது, ஆசிரியத் தாழிசையின்லக்கண முணாத்துத லுதலிற்று: என்னின்; மூன்றளவடி தம்முளொத்த மூன்று கோவையும், ஆசிரியத் தாழிசை யென்றார்:—முக்கோவை யுமென்றதாற் றனியே வரப்பெறுமாயினு மெனக்கொள்க.

"கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்
இன்று நம்மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ;

பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்கு நம்மானுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ;

கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லி நம்மானுள் வருமே லவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ."

இவை யொரு பொருண்மேன் மூன்றடுக்கி வந்த ஆசிரியத் தாழிசை.

"வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை
பான்மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை
நீனிற வண்ண நின் னிறைகழ றொழுதனம்."

என, ஆசிரியத்தாழிசை தனித்து வந்தமை யுணர்க.

நாலடி மடக்கிடை நலியினுந் துறையே. (௫௬)

இஃது, ஆசிரியத்துறை யிலக்கண முணர்த்துத னுதலிற்று:—என்னின்; நான்கடி யிடைமடக்கா யிடைகுறையி னாசிரியத் துறையாமென்றார்:—நான்கடி என்றமையினெனைத்து சீரானுமடியாய் வரப்பெறுமென்பதூஉம், மடக்கிடை நலியினென்றமையானிடையிடை நலிந்திடை மடக்காமென்பதூஉம் போந்த பொருளெனக் கொள்க.

"இரங்கு குயின்முழவா வின்னிசை யாழ்தேனா
வரங்க மணிபொழிலா வாடும்போலு மிளவேனி
லரங்க மணிபொழிலா வாடுமாயின்
மரங்கொன் மணந்தகன்றா நெஞ்சமென்செய்த
இளவேனில்."

"கொன்றார்ந்த மைந்த குருமுகத் தெழினிறக் குருதிக் கோட்டன
விருந்தாட் பெருங்கைக் குன்றுமென வன்றுமெனக்
குமுறு கின்றன கொடுந்தொழில் வேழம்,

வென்றூர்ந்தமைந்த விளங்கொளி யிளம்பிறைத்துளங்குவா

ளிலங்கெயிற் றழலுளைப் பரூஉத்தா ளதிரும் வானென
வெதிருங் கூற்றெனச் சுழலா நின்றன சுழிக்கண் யாளி,

சென்றூர்ந்த மைந்த சிறுநுதி வள்ளுகிர்ப் பொறியெருத்
தெறுழ்வலிப்

புலவுநா றழல்வாய்ப் புனலாமெனக் கனலாமெனப்
புகையா நின்றன புலிமா னேற்றை,

என்றுங் கிவையிவை யியங்கலி னெந்திறத் தினிவர வேண்
டலந்

தனிவர லெனத்தலை விலக்கலி னிறுவரை மிசையெறி
குறும்பிடை யிதுவென் னெனவது நோரூர் கரவிரவி
டைகள

வுளமது கற்றோ ரோதுங் கற்பன்றே."

இவை யிடையிடைக் குறைந்திடை மடக்காய் வந்தமை யுணர்க.

நாற்கழி நெடிலடி நலியா விருத்தம். . (சுய)

இஃது, ஆசிரியவிருத்தமா மாறுணர்த்துத லுதலிற்று: என்னின்; நான்கு கழிநெடிலடி குறையாது வருவது ஆசிரியவிருத்த மென்றூர் :—

அதற்கிலக்கியம் "இரண்டுமூன்று நாலைந்தேற்றமாஞ் சீர்கள்" என்ற சூத்திரத்தடியிற்காட்டிய,

"ஆரண," "மாதல," "விக்கா," "இடங்கை," "கொங்கு," என்னுந் தலைக்குறிப்புடைய பாககளானறிக.

நேரீற்றியற்சீர் நிரை நடுவஞ்சியும்
வராவடி பலவிற் றுள்ளலோசைத்தாய்
வருவன முறையே கலியெனக் கொளலே. (௬௧)

இஃது முற்கூறிய பாநான்கனுட் கலிப்பாவிலக்கண முணர்த்துதனுதலிற்று:—என்னின்; நேரசை யிறுதியா மியற்சீரும் வராம லடிவரையறையின்றி துள்ளலோசை பெற்றுவருவன கலிப்பாவின் முறையெனக் கொள்ளல் வேண்டுமென்றார். அடிபலவி லென்றமையாற் றன்மை யிற்கொண்டு சிறுபான்மை நெடிலடி வரினும் கொளவ ரெனபதாயிற்று. துள்ளலோசை மூன்று வகைத்தாம்; என்னை:—

"ஏந்திசைத்துள்ளல் கலித்தளை யியையின்
வெண்டளை தன்றளை யென்றிரண் டியையி
னொன்றிய வகவற் றுள்ளலென் றேனைய
தன்றளை பிறதளை யென்றிவை யனைத்தும்
பொருந்தி வரினே பிரிந்திசைத்துள்ளல்."

என்றாராகலின், வராதென்ற சீரும், தளையும் வருவன வுள வென்பதூஉ மாயவை வேறுபத்தப் படுமெனபதூஉ முணர்க:—

மாணாச் சீருறின் மயங்கு வான்கலியே. (சஉ)

இஃது மேலைச் சூத்திரத்துள் வராவென்றவற்றிற் கொழிபு நுதலிற்று :—என்னின் ; சிறப்பின்றிய சீர்களைப்பெய நிற்பன மயங்கிசைக் கொச்சகத்துட் படுக்கப் படுமென் றார் :—

தரவோடு தாழிசை யராக மம்போ
தரங்கந் தனிச்சொற் சுரிதக முறுப்பாம். (சங)

இஃது கலிப்பாவி னுறுப்புகளைப் பெயர்த்த னுதலிற்று: என்னின்; தரவு, தாழிசை; அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம, என்பன கலிக்குறுப்பாம், என் றார் :—உறுப்பாம், எனறமையின் இவை யனைத்தும் வரப பெறாஉமெனக் கொள்ளாராயினரென்பதுணரற்பாற்று:—

தந்துமுன் னிற்றலிற் றரவா மஃதள
வொன்றுமூ வடிமுத லுயருமா றடிபெறும் (சச)

இஃது தரவு உறுப்பினிலக்கண முணர்த்துத னுத லிற்று :—என்னின; கருதிய பொருளைச் சிறப்பித்து கலிப பாவின்கண் முதலுறுப்பாய் நிற்கின்றமையிற் றரவாம், அது மூன்று அளவடி முதலாறளவடிகாறும் வரப்பெறு

மென்றார். உயருமென்றமையா னாறடியின் மிக்கு வரப் பெறுமென்பதூஉ மாயவை சிறப்பின்றென்பது முணரற் பாற்று. உதாரண மேலைக் கலிப்பா விலக்கியத்துட் கண்டுகொள்க:—தரவு, எருத்த மெனவுங் கூறுவர்.

ஈரள வடிமுத லீயிரண் டடியொடு
முரணாறு பொருண்மேன் மூன்றுயர் தாழிசை. (௪௫)

இஃது, தாழிசை யுறுப்பிலக்கண முணர்த்துத னுதலிற்று:— என்னின்; இரண்டளவடி முதலாறளவடிகா றும வந்து ஒரே தன்மையுடைய செம்பொருளொன்றைச் சிறப்பித்து மூன்றும், மூன்றினுயர்ந்தும், அடுக்கி வருவன தாழிசையாமென்றா ; உயரென்றமையான் மூன்றினுய ரெனப் பொருள்கொள்க. தாழிசை, இடைநிலைப் பாட்டென்றுங் கூறுவர்.

நாலெட் டளவி னவில்கழி நெடிலின்
காலொத் தராகங் கடுகி நடக்கும். (௪௬)

இஃது, அராகவுறுப்பாமாறுணர்த்துத னுதலிற்று:— என்னின்; நான்கடி முதலெட்டடிகாறு மளவடி யானு நெடிலடியானுங் கழிநெடிலடியானுங் காற்றேபோல அராகங்கடுகி நடைபெறுமென்றார். அராகமெனினும், வண்

ணகமெனினும், முடுகியலெனினும், அடுக்கிய லெனினுங் கூறுவர்.

ஈரள விரண்டு மோரடி நான்கும்
முசசீ ரெட்டு மிருசீரி ரட்டியு
மசசீர் குறையினு மம்போ தரங்கம். (சஎ)

இஃது அம்போ தரங்கமாமாறு ணுதலிற்று:— என்னின்; இரண்டு அளவடியாலிரண்டும், ஓரளவடியால் நான்கும், சிந்தடியாலெட்டும், குறளடியாற்பதினாறும், இவை சில குறைந்தும் வருவது அம்போதரங்கவுறுப்பா மென்றார். இவற்றை முறையே பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண், எனவழங்கிவருநருமுளர். அம்போதரங்கமெனினும், அசையடியெனினும், பிரிந்திசைக்குறளெனினும், சொற்சீரடியெனினும, எண்ணெனினுங் கூறுவா.

இச்சூத்திர மேற்கோளாதலிற்று னெடுத்து மொழிதலெனுமுத்தி :—

தனிச்சொ லென்பது தன்னயச் சொல்லே. (சஅ)

இஃது, தனிச்சொலாவதியாதென வுணர்த்துத னுதலிற்று:— என்னின்; தனிச்சொலென்பது தனது நயத்தை

விளக்கிவருஞ் சொல்லென்றார். தன்னைய மென்றதாற் பாடுவனது கருதலை முன்பின் வரும் பொருள்களோடமைக்கு நயப்பொருளைத் தருஞ் சொல்லென்றாராயிற்று. தனிச்சொல், விடுகை, கூன, தனிநிலை, எனவிவை யொருபொருட்பனமொழி.

வெண்பா வகவலின் விரைந்து சுரிந்து
நின்று பொருள்கொள நேருமே சுரிதகம். (சுகூ)

இஃது சுரிதகவுறுப்பாமா றுணர்த்துத லுதலிற்று:— என்னின; வெண்பாவினாலாவது ஆசிரியத்தாலாவது நடைபெற்று விரைவிற சுழிந்து நின்றனைய பொருளை விளக்குவது சுரிதகமென்றார். சுரிந்து நின்று பொருள்கொள வென்பதாற்றுநீரப் பொருள்கோள லாதவேனையப் பொருள்கோணிலை யெனபது.

தரவே தாழிசை தனிச்சொற் சுரிதகம்
நிரலே நேரிசை யொத்தா ழிசைக்கலி. (ருய)

இஃது நேரிசை யொத்தாழிசைக் கலியாமா றுணர்த்துத லுதலிறறு:— என்னின்; தரவு, தாழிசை, தனிச்சொற், சுரிதகம, எனுமின் ஞன்குறுப்புமுறையாக வருவது

நேரிசை யொத்தாழிசைக் கலியாம். நீரலே யென்றமையி னிந்நான்குறுப்புஞ் சிறுமைப்பாட்டன்றி வாராவெனக் கொள்க.

"வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே றாய்த்திரிந்து
தோணெடுந் தகைதுறந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப்
பூணொடுங்கும் புயங்கண்டும் பொருட்பிரிதல் வலிப்பவோ;
தரவு.
ஆறுடைய கடுங்கடங்கள் சொலற்கரிய வென்பவாற்
பேருடைய நலந்தொலையப் பிரிவாரோ பெரியவரே,
சேணுடைய கடுங்கடங்கள் சொலற்கரிய வென்பவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பாரோ நலமிலரே,
சிலம்படைந்த வெஞ்சானஞ் சீரிலவே யென்பவாற்
புலம்படைந்த நலந்தொலையப் போவாரோ பொருளி
லரே;—தாழிசை.
எனவாங்கு:— தனிச்சொல்.
அருளொணு, மிலராய்ப், பொருள்வயிற், பிரிவோர்
பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடுந் தேரொடுந் தானையிற் பொலிந்தே. — சு.
சுரிதகம்.

இந்நேரிசை யொத்தாழிசைக் கலியுண் மூன்றடித்தரவும், மூன்று தாழிசையும், தனிச்சொல்லும் வந்து ஆசிரியச் சுரி

தகத்தா னிற்றமை யறிக. வெண்பாச்சுரிதகத்தானிறு
வது வந்துழிக்காண்க.

தனிசசொன் முன்னரம்போ தரங்கந்
தன்னெத் தாழிசைக கலியென மொழிப. (௫௩)

இஃது, அம்போதரங்க வொத்தாழிசையாமா றுணா
த்துத லுதலிற்று — என்னின்; தனிசசொன முனனமபோ
தரங்கவுறுபபுடைய தமபோதரங்க வொததாழிசைக கலி
பபாவென்றா. மேலைச்சூத்திரத்துள மொழிநத வுறுப
புடன, எனபதுபோநத பொருளெனக கொளக. மொழி
பவெனறமையா லமபோதரஙக வொததாழிசைக கலிக
காறடித்தரவே யுரிமையெனக கொள்க.

'கெடலறு மாமுனிவர் கிளாநதுடன ரெழுதேததக்
கடலகெழு கனைசுடாிற கலநகொளிரும் வாலுளைய
அழலவிா சுழலசெஙக ணரிமாவாய் மலைநதாளைத
தாரொடு முடிபிதரத தமனியப் பொடிபொஙக
வாாபுன லிழிகுருதி யகலிடமாா புடனைபடக்
கூருகிரா மாாபிடநத கொலைமலி தடக்கையோய; தாவு
முரசதிா வியனமதுரை முழுவதூஉந் தலைபணிப்பப
புரைதொடுத திரணடோட்ப போாமலைநத மறமல்லர்

அடியொடு முடியிருப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப்
பொடியெழ வங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ,
கலியொலி வியனுலகங் கலந்துட னிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்வு
மாணுதா ருடம்போடு மறம்பிதிர வெதிர்சலவகிச்
சேணுய ரிருவிசும்பிற் செருத்ததுநின் சினமாமோ,
படுமணி யினநிரைகள் பரந்துட னிரிந்தோட
கடுமுர ணைதிமலைந்த காரொலி யெழிலேறு
வேரிறெடு மருப்பொசிய வீழ்ந்துதிறம் வேறுக
ஏறுமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ;
இலங்கொளி மரகத மெழின்மிகு வியன்கடல்
வலம்புரி தடக்கையினை மாஅ னின்னிறம்,
விரியிணர்க் கோங்கமும் வெனதெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையுநின் னுடை; பேரெண்,
கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை,
தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை,
ஒலியிய துவண மோங்கிய கொடியினை,
வலிமிகு சகட மாற்றிய வடியினை; அளவெண்,
போரவுணர்க் கடந்தோய் நீஇ,
புணர் மருதம் பிளந்தோய் நீஇ,
நீரகல மளந்தோய் நீஇ,

நிழறிகழைம் படையோய் நீஇ; இடையெண்,
ஊழி நீஇ,
உலகு நீஇ,
உருவு நீஇ,
அருவு நீஇ,
ஆழி நீஇ,
அருளு நீஇ,
அறமு நீஇ,
மறமு நீஇ; சிற்றெண்

எனவாங்கு; தனிச்சொல்

அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்
தொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்தசிலைக கையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வே லச்சுதன்
தொன்று முதிர்கட லுலக முழுதுடன்
ஒன்று புரிதிகிரி யுருட்டுவோ னெனவே."

இது அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா. அம்போதரங்க வுறுப்புகள் குறைவின்றி வந்தன வந்துழிக் காண்க.

உரைமுறை யுறுப்பெலா முழுவதே வண்ணகம். (௰)

பெருவரைத்தோ ளருளுதற் கிருளிடைத் தமியையாய்
இருவரைக் கதிர்ப்பிகருங் காதலுங் காதலோ,
பாங்கனையே வாயிலாப் பல்காலும வந்தொழுகுந்
தேங்காத கரவினையுந் தெரியாத விருளிடைக்கட்
குடவரைவேய்த தோளிணைகள் குளிர்ப்பிப்பான்
றமியையாய்
தடமலர்த்தா ரருளுஙின றகுதியுந் தகுதியோ;தாழிசை.

தாதுறு, முறுசெறி, தடமல, ரிடையிடை, தழலென, விரி ளைவ, பொழில், போதுறு, நறுவிரை, புதுமலர், தெருசரு, கருநெய்கல், விரிவன, சழி, தீதுற, திறமறு, கெனநனி, முனிவன, துணையொடு, பிணைவன, துறை, மூதுறு, மொலி சலி, நுரைதரு, திரையொடு, கடிதொடர், புடையது, கட ல்; இவை நானகும அராகம்.

கொடுந்திற லுடையன சுறவேறு கோட்பதனல்,
இடுசெழி யிராவருதல் வேண்டா வென்றிசைத்திலமோ,
கருநிறத் துறுதொழிற் கராம்பெரி துடைமையால்,
இருணிறத் தொருகாணி விராவார லென்றிலமோ;—பே
ரெண்

நாளெறி சுழிந்நன்றூற் பெண்ணாசி நலத்தகையே,
தாஞ்சலு மொழிசுதனைறூற் றொடிததோளித் தடங்கணணே,

அரற்றோடு கழிந்தன்றா லாரிருளு மாயிழைக்கே,
நயப்போடு கழிந்தன்றா னனவது நன்னுதற்கே;—அள
வெண்

அத்திறத்தி னசைந்தன தோள்
அலர்தற்கு மெலிந்தன கண்
பொய்த்துரையாற் புலர்ந்தது முகம்
பொன்னிறத்தாற் போர்த்தன புயம்
அழலினா லசைந்தது நகை
அணியினா லொசிந்த திடை
குழலினா னிமிர்ந்தது முடி
குறையினாற் கோடிற்று நிறை;—இடையெண்
உட்கொண்ட தகைத்தொரு பால்
உலகறிந்த வலத்தொரு பால்
கட்கொண்ட றாளித்தொரு பால்
கழிவெய்தும் படித்தொரு பால்
பரிவுறூஉந் தகைத்தொரு பால்
படிவுறூஉம் பசப்பொரு பால்
இரவுறூஉந் துயரொரு பால்
இனிவந்த வெளிற்றொரு பால்
மெலிவுறூஉந் தகைத்தொரு பால்

விளர்ப்புவந் தடைந்தொரு பால்
பொலிவுசென் றகன்றொரு பால்
பொறைவந்து கூர்ந்தொரு பால்
காதலிற் கதிர்ப்பொரு பால்
கட்படாத் துயரொரு பால்; சிறந்தென
எனவாங்கு; தனிச்சொல
இன்னதிவ் வழக இத்திறமிவனல
மென்னை முனருட் டுணையாகிற
சலநகவ ணிலைமை யாயினு நலநுகக்
கிளையொடு செழீஇய தளையவிழ் கோதையைக்
கறப்போ காணிய யாமே
பொறபொடு பொலிகநும் புணர்ச்சி தானே.

ஆசிரிதகம் ஆ-என. ஆறுறுப்புப் பெற்று வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா வாயவாறிக:—

தரவே தரவிணை தாழிசை சிலபல
மயங்கு முறுப்பு மான்முறைக் கொச்சகம். (ருக)

இஃது கொச்சகக் கலிப்பாவிலக்கண நுதலிற்று -என்னின்,

ஒரு தரவும், இரண்டு தரவும், சிலதாழிசையும். பல தாழிசையும், முறைகூறிய வுறுப்புகள் வேற்றுமைப்பட்டு

மயங்கியும், வருவன முறையே தரவு கொச்சகக் கலியெனவும், தரவிணை கொச்சகக் கலியெனவும், சிஃறாழிசைக் கொச்சகக் கலியெனவும், பஃறாழிசைக் கொச்சகக் கலியெனவும், மயங்கிசைக் கொச்சகக் கலியெனவும் பெயர் பெறுமெனறூர் :—மாண்முறை யென்றமையின், தரவு கொச்சகம தனியே வருவதன்றி தனிச்சொற் பெற்று சுரிதகந்த மூவுமென்பதூஉம், தரவிணைக் கொச்சகர் தனியேயிரண்டடுக்கி வருவதன்றி யிடையிலுங் கடையிலுந் தனிச்சொற் பெற்று சுரிதகந்த மூவுமென்பதூஉம், நேரிசை யொத்தாழிசைக் கலிபிறழ்வது சிஃறாழிசைக கொச்சகமாமென்பதூஉம், சிஃறாழிசை யிடையிடைத் தனிச்சொலும் பெற்று வருமென்பதூஉம், பஃறாழிசை நேரிசை யொத்தாழிசைக் குறைததவுறுப்புகளான முடியுமாயினு மிடையிடைத் தனிச்சொலும் பெறறு மூன்றிலதிகரித்துத் தாழிசை வருமென்பதூஉம், அம்போதரங்கம், வண்ணகம் இவற்றினுறுப்பு கண்மிககும், குறைந்து, முறழ்ந்தும், பிறழ்ந்தும மயங்கியும் வருவனவு மிடையிடைத் தனிச்சொலும் பெற்று வருவனவுமே மயங்கிசைக் கொச்சகக் கலியெனவு முணரற்பாற்று :—

" செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி

முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போ
யெல்லைநீர் வியன்கோண்மூ விடைநுழையு மதியம்போன்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே"
இது தரவு கொச்சகந் தனி வந்தமை யுணர்த்திற்று :—
"வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்குங் காவலனும்
கொடிபடு மணிமாடக் கூடலார் கோமானே—எனவாங்கு,
துணைவளைத்தோ ளிவண்மெலியத் தொன்னலந் தொடர்ப் புண்டான்
இணைமலர்த் தாரருளுமேலிது விதற்கோ மாறென்று.

துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கருதாரே—அதனால்,
செவ்வாய்ப் பேதை யிவடிறத்
தெவ்வா றுங்கொலிஃ தெண்ணிய வாறே"
என, தரவிணைக் கொச்சக மிடையிடையே 'எனவாங்கு,' 'அதனால்,' என்னுந் தனிச் சொற்களடைந்தாசிரியச் சுரிதகத்தானிற் றமை யுணர்க :—தரவிணைக் கொச்சகம், தனிச் சொலின்றி வருவதும், ஏனையக் கொச்சகங் கட்கிலக்கியும் வந்துழிக்காண்க :—

வெண்பா விசைந்திறின் வெண்கலிப் பாவே. (ருச)

இஃது கலி வெண்பா வாமாறுணர்த்துதனுதலிற்று:— என்னின ; வெணபா வொன்றி வெண்பாப் போற் சிந்தடி யாலிறுவது கலி வெண்பா வென்றா :—ஆகவே, இயறசீர், வெணசீர் வெண்டளையுங் கலித்தளையு மாசிரியததளையும் பெறறு வருமென்பது தொல்லாசிரியா சொள்கை :—அடி வரையறை கூறாமையின், எனைத்தடியானும் வருமென வுணர்க :—

"சுடர்த்தொடீஇ கேளாய் தெருவில் யாமாடு
மணறசிறறிற் காலிற் சிதையா வடர்ச்சியபொற்
கோதை பரிந்து வரிப்பந்து கொணடோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நா
ளனனையு மியானு மிருந்தேமா வில்லுளே
யுண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
யடாபோற் சிரகத்தால் வாக்குச் சுடரிழா
யுண்ணுநீ ரூட்டி வாவென்ற ளெனயானுந்
தன்னை யறியாது செனறேனை மற்றென்னை
வளைமுன் கைபற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்தகா ணென்றேனா

லன்னை யலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணுநீர் விக்கினா னென்றேனா வன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கண்ணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன்"
இது கலிவெண்பா வாமாறறிக ;—

ஈறுமிக் களவி பிறுங்கலித் தாழிசை. (ருரு)

இஃது கலித்தாழிசை யாமாறுணர்த்துதனுதலிற்று:— என்னின் ; ஈற்றடி மிகுந்து ஏனையடிகளளவடிக்கண் முடிவதும் அளவடி யினெல்லையிற் சிதைவதுங் கலித்தாழிசை யாமென்றார் :—"ஒன்றின முடித்தறன்னின முடித்தலெ" னுமுத்தியான், கலித்தாழிசை யொருபொருண்மேன் மூன்றடுக்கி வருவன சிறப்புடைத்தென வுணர்க :—

"வான்வரி வேங்கை வழக்குருஞ் சிறுநெறியங்
கேள்வரும் போதி லெழலாய்க் குருலியரோ
நீள்வரி நாகத் தெயிறே வாழி வெண்டிங்காள்"

இது, ஈற்றடிமிக்கு ஏனையவடிகள் அளவடியான் வந்த கலித்தாழிசை :—

"பூண்ட பறையறையப் பூதமருள
நீண்ட சடையா ளாடுமே
நீண்ட சடையா ளாடுமென்ப
மாண்ட சாயன் மலைமகள் காணவே காணவே"

இது, ஈற்றடி மிகுந்து, முதலடியு மூன்றாமடியு மொத்து, இரண்டாமடி குறைந்து வந்த கலித்தாழிசை;

"கொய்தினை காத்துங் குளவி யடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்,
ஆய்தினை காத்து மருவி யடுக்கத்தெம்
மாசில் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்,
மென்றினை காத்து மிதுபூங் கமழ்சோலை
குன்றச் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்"

இது, இரண்டடி யாயீற்றடிமிக்கு மூன்று ஒரு பொருண்மேல் வந்த கலித்தாழிசை.

நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை. (௫௬)

இஃது கலித்துறை யிலக்கண முணர்த்துதனுதலிற்று:- என்னின; நான்கு நெடிலடி யொத்து வருவது கலித்துறை யென்றார் :—

"யானுந் தோழியு மாயமு மாடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேற்
கானும் புள்ளுங் கைதையு மெல்லாங் கரியன்றே."

இது, நெடிலடி நான்கு வந்தமையிற் கலித்துறையாம்: நிகழ்வது என்றமையான், சட்டளைக் கலித்துறை யொன் றுள தென்றுணற்பாற்று ; எனனை :—

"அடியடி தோறு மைஞ்சீ ராகி
முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்
கடையொரு சீரும் விளங்கா யாகி
நேர்பதி னாறே நிரைபதி னேழென்
றோதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே.

என்றதனானுணர்க.

"ஆயுங் கலையுஞ் சுருதியுங் காண்டற் கரியவுனைத்
தோயும் படிக்குக் கருணைசெய் வாய்சுக வான்பொருளே
தாயும் பிதாவுந் தமருங் குருவுந் தனிமுதலும்
நீயும் பரைய மென்றே யுணாநதேனிது நிச்சயமே."

"உடைகோ வணமுண் டுறங்கப் புறந்திணை யுண்டுணவிங்
கடைகா யிலையுண் டருந்தத்தண் ணீருண் டருந்துணைக்கே
விடையே றுமீசர் திருநாம முண்டிந்த மேதினியில்
வடகோ டுயர்ந்தென்ன தென்கோ டுயர்ந்தென்ன வான்
பிறைக்கே.

இவை ஓரோர் அடிக்குமைஞ் சீருடைத்தாய் முதனான்கு சீரும் வெண்டளை தட்டுக்கடைச்சீர் 'விளங்காய்' என்னும் வாய்ப்பாட்டான் முடிந்து நேரசை முதலாகத் தொடர்ந்த வடியொவ்வொன்றினுக்குப் பதினாறெழுத்தும், நிரையசை முதலாகத் தொடர்ந்த வொவ்வொரு அடிக்குப் பதினே ழெழுத்தும் பெற்று நாலடி தம்முளொத்து முடிந்தமை யாற் கட்டளைக் கலித்துறை யென்னப்படும் :—முன் சூத் திரமேற் கோளா கலிற்றுனெடுத்து மொழிதலெனு முத்தி.

அளவடி நான்கின கலிவிருத் தம்மே. (௬௭)

இஃது கலிவிருத்த விலக்கண நுதலிற்று :—என்னின் ; அளவடி நான்கு தம்முளொத்து முடிவது கலிவிருத்த மெ ன்றார் :—

> "உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
> நிலவு லாவிய நீர்மலி வேணியன்
> அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
> மலர்ச்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்."

என, அளவடி நான்கு தம்முளொத்து முடிந்தமையிற் கலிவிருத்த மாயதுணர்க ; இச்சூத்திரமேற் கோளா கலி ற்றுனெடுத்து மொழிதலெனு முத்தி.

தொல்குறள் சிந்திற் றூங்கு மிசைத்தாய்
வஞ்சி நடக்கும் வழக்கினை யுடைய. (ருஅ)

இஃது வஞ்சிப்பா விலக்கண முணர்த்து தனுதலிற்று: என்னின்; குறளடியானுஞ் சிந்தடியானுந் தூங்கலோசை பெற்று வஞ்சிப்பா வரும் என்றார்; தூங்கலோசை மூன்று விதமாமாறு:—

"ஒன்றிய வஞ்சித் தளையே வரினு
மொன்று வஞ்சித் தளையே வரினு
மென்றிவை யனைத்தும் பிறவு மயங்கினு
மேந்த லகவல் பிரிந்திசைத் தூங்கலென்
றுய்ந்த நிரனிறை யாகு மெனப;"

என்றதனுணர்க.

குறளடி நான்கின்றுக் கோவையுந் தானு
முறுநாற் சிந்து முறவே தாழிசை
துறையே விருத்தந் தனிசொற் பெற்றே
யகவற் சுரிதகத் தானிறும் வஞ்சியே. (ருகூ)

இஃது, வஞ்சிப்பாவும் வஞ்சிப்பாவினமு மாமாறுணர்த்து தனுதலிற்று:— என்னின; நான்கு குறள்க ளிணைந்து

மூன்றொருபொருண் மேற்கோவையாய் வருவதும், நான்கு குறளடிகடனித்துவருவதும், நான்கு சிந்தடியான்முடிவதும். முறையே வஞ்சித்தாழிசையும், வஞ்சித்துறையும், வஞ்சி விருத்தமுமாம; தனிச்சொற்பெற்று, அகவற்சுரிதகத்தாணமுடிவது குறளடி வஞ்சிப்பாவுஞ் சிந்தடிவஞ்சிப்பாவுமாமெனறார், அடிவரையறை கூறாமையினெனைத் தடியானும வரபபெறுமெனக்கொளக.

“ மடப்பிடியை மதவேழந்
தடக்கையான் வெயின்மறைக்கு
மிடைச்சுர மிறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்;
பேடையை யிரும்போத்துத்
தோகையான் வெயின்மறைக்குங்
காடக மிறந்தார்க்கே
யோடுமென் மனனேகாண்;
இரும்பிடியை யிகல்வேழம்
பெருங்கையான் வெயின்மறைக்கு
மருஞ்சுர மிறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண்.”

**இவை குறளடி நான்கின்முடிந்த மூன்றொருபொருண் மேலடுக்கிவந்தமையின் வஞ்சித்தாழிசை.**

"மைசிறந்தன மணிவரை
கைசிறந்தன காந்தளும்
பொய்சிறந்தனர் காதலர்
மெய்சிறந்திலர் விளங்கிழாய்.',

இது குறளடி நான்கின் முடிந்து தனிவந்தமையின் வஞ்சித்துறை.

"சோலை யார்ந்த சுரத்திடைக்
காலை யாகழ லாரப்பவும்
மாலை மார்பன் வருமாயின்
நீல வுண்கணிவள் வாழுமே."

இது, சிந்தடி நான்கின் முடிந்தமையின் வஞ்சிவிருத்தம்.

"சுறமறிவன துறையெல்லாம்
இறவின்பன வில்லெல்லாம்
மீன்றிரிவன கிடங்கெல்லாம்
தேன்றாழ்வன பொழிலெல்லாம்—எனவாங்கு,
தண்பணை தழீஇய விருக்கை
மண்கெழு நெடுமதின் மன்னனூரே.'

இது, முதனான்கடியுங் குறளடியாய் நான்காமடியென வாங்கு, என்னுந் தனிச்சொற்பெற்று, ஆசிரியச்சுரிதகத்தா லிற்றமையின், குறளடி வஞ்சிப்பா.

"தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோ
ண்மேல்
பன்னலத்த கலைந்தொலையப் பரிவெய்தி
யென்னலததகை யிதுவென்ன வெழில்காட்டி
சொன்னலத்தகைப்பொருள்கருத்தி னிற்சிறந்தா
ங்—கெனப்பெரிதும்
சலங்களுஞ ரெய்தி விடுப்பவும்
சிலமபிடைச் செல்லவுஞ் சேணிவந் தற்றே."

இது முதனான்சடியுஞ் சிந்தடியாய் ஈான்சாமடியென ப்பெரிதும் என்னுந்தனிச்சொறபெற்று ஆசிரியச்சுரிதகத் தாலிறறமையின், சிந்தடிவஞ்சிப்பா.

வாயுரை புறநிலை வாழ்த்தே கைக்கிளை
செவியறி வுறூஉச் சேர்ந்தன பொருண்மேல்
வெண்பா முதலா வகவ லொடூர்ந்தே
வருவது மருட்பா வென்மனார் புலவர். (கூ0)

இஃது மருட்பாவாமாறுணர்த்து தனுதலிற்று:—என் னின்; வாயுரைவாழ்த்தும், புறநிலைவாழ்த்தும், கைக்கிளை யும், செவியறிவுறூஉமென்னு மின்னான்கு பொருள்களு ளொன்றைச்சார்ந்துவெண்பாமுதலாய் ஆசிரியமிறுதியாய்

வருவதுமருட்பாவென்றார்; அடிவரையறை கூறாமையினெ
னைத்தடியானும் வரப்பெறூஉமெனக்கொள்க. ஈண்டுவாயு
ரைவாழ்த்தென்பது.—

"வாயுரை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
றாங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தன்றே"

என்றதனானுணர்க. இதற்கிலக்கியம் வருமாறு:—

"பலமுறைய மேம்பப் படுவன கேண்மின்
சொலன்முறைகட் டோன்றிச் சூடாமணித் தேரூர்ந்து
நிலமுறையி னாண்ட நிசரில்லார் மாட்டும்
சிலமுறை யல்லது செல்வங்க ளில்லா
இல்லவரு மெறிபடையு மாற்றலு மணபுங்
கலந்ததங் கல்வியுந் தோற்றமு மேனைப்
பொலனசெய் புனைகலனு டிவ்வா றனைத்தும்
விலங்கி வருங்கூற்றை விலக்கலு மாகா
அனைத்தாத லியிருங் காண்டா
நினைத்தக்க கூறிய வெம்மொழி பிழையாது
தேறினீ ரொழுகிற் சென்று பயன்றருமே."

இது, வாயுரை வாழ்த்து மருட்பா.
புறநிலை வாழ்த்தென்பது:—

"வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ."

என்றதனானுணர்க: இதற்கிலக்கியம் வருமாறு:—

"தென்றல் விடைபோழ்ந்து தேனூர் நறுமுல்லை
முன்றின் முகைவிரியு முத்தநீர்த் தண்கோளூர்க்
குன்றமாநகத் கொல்லேற்றூ ணிற்புறங் காப்ப—என்றுந்
திராத நண்பிற் றேவர்
சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே."

இது, புறநிலை வாழ்த்து மருட்பா;
கைக்கிளை யெனபது:—

"காட்சி முதலாக் கலவியி னொருதலை
வேட்கையிற புலம்புதல் கைக்கிளை யதுதான்
கேட்போ ரில்லாக் கிளவிகள் பெறுமே."

என்றதனானுணர்க; இதற்கிலக்கியம் வருமாறு:—

"திருநுதல் வேர்வரும்புந் தேங்கோதை வாடு
மிருநிலஞ் சேவடியுந் தோயும்—அரிபரந்து
பேயித முண்கணு மிமைக்கும்
ஆகு மற்றிவ ளகலிடத் தணங்கே."

இது, ஒரு தலைக்காம நுதலினமையிற் கைக்கிளை மருட்பா ; செவியறிவுறூஉ வென்பது :—

"செவியுறைதானே—பொங்குதலின்றிப் புரையோர் நாப்ப ணவிதல் கடனெனச் செவியுறுத தற்றே."

என்றதனானுணர்க ; இதற்கிலக்கியம் வருமாறு :—

"பல்யானை மன்னர் முருங்க வமருழந்து
கொல்யானைத் தேரொடுங் கோட்டந்து நல்ல
தலையாலங் கானம் பொலியத் தொலையாப்
படுகளம் பாடுபுக் காற்றிய பசைஞர்
அடுகளம் வெட்டோனை மருச வடுத்திறல்
ஆளி நிமிர்தோட் பெருவழுதி யஞ்ஞான்றும்
ஈர முடையய்யா வெனவாயச் சொற கேட்டி
உடைய வுழவரை நெஞ்சனுங் கக் கொண்டு
வருகா லுழுவாக்கு வேளாண்மை செய்யல்
மழைய றிழைக்கும் வரைகசா ணிறியீட்டம
காட்டு மமைச்சரை யாற்றத் தெளியல்
அமைந்த வரும்பொரு ளாறன்றி யெவ்வல்
இளைதைப் பெறும்பொரு ளாசையாற் சென்று
மனற மருக விசழா தியென்றும்
மறப்புற மாக மதுரையோ ரோம்பும்

அறப்புற மாசைப்பட் டேற்க வரத்தால்
அவையார் கொடுநாத் திருத்தி நவையாக
நாட்டார் குழிசி சிதையா தியொட்டார்
செவிபுதைக்குந் தீய கடுஞ் சொற் கவி யுடைத்தாய்க்
சற்றார்க் கினனுங்கி கல்லார் கடுந்தொழுகிச்
செற்றார்ச் செறுத்தாங்கிற சேர்ந்தாரை யாக்குதி
அற்ற மறிந்த வறிவினாய்—மற்றும்
இவையிவை வீயா தொழுகு நிலையாற்
பொருகட லாடை நிலமகள்
ஒருகுடை நீழற் றுஞ்சவண் மன்னே.”

இது, வியப்பின்றி யியந்தோர்கண் வியந்தொழுகுதல் கடனென வரசர்க்குரைத்த தமையின, செவியறிவுறூஉமருட்பா: என்மனார் என்றமையான், வெண்பாவுமாசிரியமு மொத்துவருவது சமநிலைமருட்பாவென்றும், ஒவ்வாதது வியனிலைமருட்பாவென்றும், வழங்கப்படுமென்பதூம்; அகவலடியிரண்டாய்க் கடையதனயலடி முச்சீராய் வருவது சிறப்புடைத்தென்பதூஉம், கைக்கிளை வேறுபாக்களாலும் வரப்பெறுமென்பதூஉமுணரற்பாற்று.

## ஒழிபியல்.

மாத்திரை முறையான் மரபே யசைச்சீ
னரையுங் காலு மலகில வாகும் (சூக)

இஃது, ஒருசாரெழுத்துக்கட் செய்தியவிலக்கண முணர்த்துதனுதலிற்று :—என்னின் ; ஆன்றோர் வழக்கினையனுசரித்து மாத்திரை நோக்கியசை கொள்ளுமிடத்தரை மாத்திரையுங்கால் மாத்திரையும், அலகுகாரியம் பெறுவென்றா :—என்னை ;

“ தனிநிலை யொற்றிவை தாமலகிலவே
யளபெடையல்லாக் காலை யான
தொடரா றுயிறு மெவொற் றுயிறு
மோரொற் றியல வெனமனார் புலவர்.”

என்றதனுலுணர்க : அரையும், காலும், மாத்திரையுள்ளவெழுத்துகள் அளபெழுந்து வருங்காலத்து இரட்டித்தும், மூன்றுயுமிணைத்து நிறபிறுமலகிடார் ; மாத்திரையளவு :—

“ உன்னல் காலே யூன்ற லரையே
முறுக்கல் முக்கால விடுத்த லொன்றே”

என்றதனுனறிக. எழுத்துகளின் மாத்திரைகொள்கை :—

“ மூன்றுயிரள பிரண் டாநெடி லொன்றே
குறிலோ டையௌக் குறுக்க மொற்றள
பரையொற றிஉக் குறுக்க மாய்தங்
கால்குறண் மஃகா னாய்த மாத்திரை.”

என்றதானுணர்க ; மரபேயென்றமையினுயிரெழுத்துப் பன்னிரண்டு மெய்பதினென்று மாத்திரைகாறும் இசைபெமென்பதூஉம், நெட்டெழுத்து தனியளபெழுமிடத்திரு நேரசையும், குற்றெழுத்திணைந்தள பெழுமிடத்துகுறிலோடு சேர்க்கப்பட்டு நிரைநேர் அசையுமாக் கொள்ளப்படுமென்பதூஉம், ஒற்றுமாய்தமு மளபெழுமிடத்தொரு மாத்திரையுடைய தாயலகிடப் பெறுமென்பதூஉம், ஐகாரக் குறுக்கமுமௌகாரக் குறுக்கமுஞ்சிறுபான்மைக் குற்றெழுத்தள வினவாய்க்குறிலோடு நெடிலோடுமிணைந்து நிரையசையாமென்பதூஉங், கொள்க :—

"ஏஎர் சிதைய வழாஅ லெழா நின்
சேயரி சிந்திய கண்"

என்புழி 'ஏஎர்' என்பது நேர்நேர்=தேமா, எனவும் 'வழாஅ', 'லெழாஅ', என்பது நிரைநேர்=புளிமா, எனவுமாயமையறிக :—

"இலங்ங்கு வெண்பிறை சூடீச னடியார்க்குக்
கலங்ங்கு நெஞ்சமிலை காணே."
"எஃஃகி லங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு."

என்புழி, ஒற்றுமாய்தமு மளபெழுந்து குறிலோடி ணைந்து நிரையசையாயதுணாக.

"கெண்டையை வென்ற கிளரொளி யுண்கணாள்
பண்டைய ளல்லள் படி"

என்றவிடத்து, "பண்டைய" என்பது நேர்நிறை = கூ விளம், எனக்கொள்ளப்பட்டமை யான் ஐகாரம் குற்றெழு த்தோடிணைந்து நிரையானமை யுணர்க. ஏனையவந்துழிக் காண்க.

குறுகிய இஉ அளபு மனைத்தே
சிருந்த தளையுஞ் சிதறுங் காலே. (சூ உ)

இஃது குற்றியலிகரங் குற்றியலுகர மளபெடையிவ ற்றிற் கமையுமொரு புடையிலக்கண முணர்த்து தனுதலி ற்று. என்னின்; பாக்களையுதாரண வாய்ப்பாட்டானே சை யூட்டிச்சிருந்தளையுங் கொள்ளுமிடத்து அவையிரண டும் பிறழ்ந்து பாவிற்குக்குற்றமொராபண முண்டாமெனக் காணிற் குற்றியலிகரமுங் குற்றியலுகரமு மளபெடையு முற் கூறியவண்ண மலகுகாரியம் பெறாவென்றார். சித றுங்காலே யனைத்தே யென்றமையின், சிதறாக்காலை இயல் பினமையுமென்றாரென்க :—

"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளாச் செவி."
"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்."

என்னுங்குறட்பாவிடை தகரத்தையூர்ந்த விகரங்குற்றியலிகர மாதலினதை யொழித்தாலலது ஆசிரியத்தளையுங் கலித்தளையும் வந்து வெண்பாவியல் கெடுமாகலின் அலகுபெறுதாயிற்று :—

"கொன்றுகோடு நீடு குருதிபாயவும்"

என்னுமிருசீரடி வஞ்சியுட் குற்றுகரம் அலகுபெருமாயினுந் தசைச்சீராவது பற்றிகுற்றுகர மலகுபெறுதாயிற்று :—

"பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை பைங்கிளிகள்
சொல்லுக்குத் தோற்றின்னந் தோன்றினவால்—நெல்லுக்கு
நூறேழநூ றென்பானுடங்கிடைக்கு மொண்டொடிக்கு
மாறேமா லன்றளந்த மண்."

இவ்வெண்பாவில், 'நூறேழநூ' என்புழிப்பண்டமாற்றநூ கரணவோசை பற்றி யளபெழுந்து நாலசையாய

மையின் அவ்வளவு, அலங்காரியம் பெறுதாயிற்று. இனி இயல்பாயலங்காரியம் பெறுவனவற்றிற்கிலக்கிய மிகவுள ஆகலின வந்துழிக்காண்க.

தனியிசை யல்வழிக் குறினே ராகா (௩௩)

இஃது, குற்றெழுத்துக்கெய்திய விலக்கண நுதலிற்

று: என்னின்:—தனித்திசைத்தாலல்லது குற்றெழுத்துக்கள் நேரசையாகாவாமெனறுர்: எனவே;

"ஏவல் குறிப்பே தற்சுட் டல்வழி
யசையுந் தனிக்குறின் முதலசை யாகா"

என்றதனுணர்க:—தனிக்குறினேரசையாவது "குறுகிய இஉ அளவு மனேதகே," "இலங்கு," "எஃஃகு," என்னுஞ் செய்யுட்களிற் காண்க—:

மோனை யெதுகை முரணியை பளபுங்
கடையே கடையிணை யிருநான் கொருமுன்
றிருநடுச் சீர்களி னெய்தும முறையிற்
கடையே கடையிணை கடைபயின் கூழை
யிடைப்புணரெனறே யிசைத்தனர் கொளலே (௩௪)

இஃது, தொடைகட் கெய்தியதோர வேறுபாடு நுதலிற்று:—என்னின்: மோனைமுதலாகிய வைந்துதொடை

யும், கடைச்சீரிலும், கடையிருசீரிலும், இரண்டாஞ்சீரிலும் நான்காஞ்சீரிலும், கடைமூன்றுசீரினும், இடையிரண்டுசீரி னும், அடிதொறுந்தொடுத்து வருவது முறையாகக்கடை மோனை, கடையிணைமோனை, பின்கடைமோனை, கடைக்கூ ழைமோனை, யிடைப்புணர்மோனை எனவும், ஏனையவுமிது போற் பெயர்க்கப்படுமெனவும் கூறினர் :—

"கயன்மலைப் பன்ன கண்ணிணை கரிதே
தடமுலை திவளுந் தனிவடம் வெளிதே
நாலி னுண்ணிடை சிறிதே
ஆடமைத் தோளிக் கந்தமோ பெரிதே"

இஃது, அடிதோறு மிறுதிக்கண் மறுதலைப்படத்தொ டுத்தமையிற் கடைமுரண் :—

"மீன்றேர்ந் தருந்திய கருங்கால் வெண்குருகு
தேனார் ஞாழல் விரிசினை துழைஉம்
தண்ணந் துறைவன் றவிர்ப்பவுந் தவிரான்
தேரோ காணலங் காண்டும்
பீரோ வண்ணமுஞ் சிறுநுதற் பெரிதே"

இஃது, அடிதோறு மிறுதியிருசீர்க்கண் மறுதலைப்ப டத்தொடுத்தமையிற் கடையிணைமுரண் :—

“சார லோங்கிய தடந்தாட்டாழை
கொய்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து
தமியே மிருந்தன மாக நின்றுதன்
நலனுடைப் பணிமொழி நன்குபல பயிற்றி
வீங்குதொடிப் பணைத்தோ ளணைகிழத்
தறந்தோ னல்லனம் மேனியோ தீதே”

இஃது அடிதோறு மிரண்டாஞ்சீரும், மறுதலைப் படத் தொடுத்தமையிற் பின்கடைமுரண் :—

“காவியங் கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி
பூவிரி சுரிமென் கூந்தலும்
வேய்புரை தோளு மணங்குமா லெமக்கே”

இஃது, முதலொழி மூன்று சீர்க்கணு மறுதலைப்படத் தொடுத்தமையின் கடைக்கூழை முரண் :—

“போது விரிகுறிஞ்சி நெடுந்தண் மால்வரைக்
கோதையிற றழ்ந்து வோங்கல் வெள்ளருவி
காந்தளஞ் சேங்குலைப் பசுங்கூ தாளி
வேரல் விரிமலர் பூளையொடு விரைஇப்
பெருமலைச் சீறூ ரிழிதரு நலங்கவர்ந்
தின்று வாயி னினியோர் மாட்டே”

இஃது, இடையிருசீரும் மறுதலைப்படத் தொடுத்தமையின் இடைப்புணர் முரண். ஏனைய வந்துழிக்காண்க.

வருக்க நெடிலினம் வருவதும் வரையார்
மோனை யெதுகை முறைமை யானே. (சுரு)

இதுவுமது :—என்னின் :—வருக்கவெழுத்தும், நெட்டெழுத்தும், இனவெழுத்தும, மோனையெதுகை முறையில் தொடுத்துவரினும் நீககாது வருக்கமோனை, நெடினமோனை இனமோனை, வருக்கவெதுகை, நெடிலெதுகை, இனவெதுகை யெனக்கொள்ளப்படுமென்றார். வருக்கம் என்றது; உயிரெழுத்தோடு கூடி யமெய் பதினெட்டு மொவ்வொரு மெய்யினியக்கம்பன்னிரண்டு மெனககொள்க; நெடிலென றது; நெட்டெழுததேழும், இவை மெய்யொடு சேர்ந்தது மெனசகொள்க; இனம் என்றது; உயிரினுள், அ, ஆ, ஐ, ஔ: தம்முளினமாம்; இ, ஈ, எ, ஏ, தமமுளினமாம; உ, ஊ, ஒ, ஓ, தம்முளினமாம, மெய்யினுள், வல்லினம், மெல்லினம், இடையினமெனக்கொள்க :—

" சிறப்பீனுஞ் செல்வம் பெரினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள் "

இதில், அடிமுதற்கண் சகரவருக்கந் தொடுத்து நிற்கச சகரவருகக மோனையும்; முதற்சீர் முதலெழுத்தும் மூன்றுஞ்சீர் முதலெழுத்தும் வல்லினமாகலின வல்லினமோனை :—

" ஒஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
ஆஅது மென்னு மவர் "

இதில், அடிக்கண் முதலெழுத்தொன்றாதாயினு நெடிலொப்புமையின் நெடின்மோனையும், முதற்சீர்க்கணன்றி மூன்றாஞ்சீர்க்கண்ணு முள்ளமுதலெழுத் துயிரினமாதலினு யிரினமோனை :—பிறவும் வந்த வழிக்காண்க :—

"அறத்தா றிதுவென வேண்டாச் சிவிகை
பொறுத்தானோ, டூர்ந்தா னிடை"

இதில், அடியிரண்டாமெழுத்து றகரமெய் வருக்க வெதுகை :—

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு."

இதில், அடிக்கணிரண்டாமெழுத்து வல்லினமாதலின் வல்லினவெதுகை :—

"ஆவாவென்றே யஞ்சினராழ்ந்தாரொருசாரார்
கூகூவென்றே கூவிளிகொண்டா ரொருசாரார்."

இதில், அடிக்கணிரண்டாமெழுத்தின் மேலேறிய நெடிலொப்புமை நோக்கி நெடிலெதுகையாயிற்று :—பிறவுமன்ன :—

சீர்முழு தொன்றிற் சிறப்பா மிரண்டு
போமெழுத் தொன்றி னிடைகடை பிறவே. (கக)

இதுவுமது : என்னின் :— அவ்விரண்டு தொடைகளுஞ் சீர்களில் முழுதுமொன்றி வந்தாலுத்தமமெனவும், ஓரெழுத்தோன்றிவந்தால் மத்திமமெனவும், ஏனையவிதமொன்றினதமமெனவுங் கூறுவாராயினர். பிறவே என்றமையான், உயிரெதுகை, ஆசெதுகை, இடையிட்டெதுகை, இரண்டடியெதுகை, மூன்றாமெழுத்தொன்றெதுகை, விட்டிசையெதுகை, இரண்டடிமோனை, விட்டிசைமோனை, எனவும பலவாறு வருவன சிறப்பின்றென்க. உயிரெதுகை, உயிர்மாத்திரை யொன்றிவருவதும், ஆசெதுகை—யரழல—எனுமெய்கள் நடுவே படுக்கப்படுவதும்; இடையிட்டெதுகை, ஓரடியிடையிட்டொன்றுவதும், இரண்டடியெதுகை, இரண்டடிக்கண்மாத்திரமொன்றுவதும; மூன்றாமெழுத்தொன்றெதுகை, மூன்றாமெழுத்தொன்றுவதும்; விட்டிசையெதுகை, எழுத்துக்கள் விட்டிசைத்தொன்றி வருவது மாமெனக்கொள்க. இவ்வண்ணமே மோனைக்குஞ்சிற்சில விகற்பங்களுள; எனினிவை முற்கூறியபடி சிறப்பிலவாம் :—

“ பற்றுக பற்றற்றான் பற்றினைய பற்றைப்
பற்றுகப் பற்று விடற்கு.”

இனுட்டலையாகுமோனை யுமெதுகையும் வந்தனம யுணர்க :—

“ மாவும் புள்ளும் வதிவயிற் படர
மாநீர் விரிந்த பூவுங் கூம்ப,”

இதனுளிடையாகுமோனை வந்தமையறிக.

"சிறப்பீனு" மென்ற குறளுள் வருக்கமோனையனை யதுகடையாகுமோனையெனக்கொள்க.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு."

இதனுளிரண்டாமெழுத் தொன்றினதிடையாகெதுகை.

"தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்."

இது கடையாகெதுகை:— மற்றைய விவரித்துரைத் தமையின் வந்துழிக் கண்டுகொள்க.

அம்மை யழகு தொன்மை தோல்விருந்
தியைபு புலனிழை பெனவனப் பெட்டுந்
தொடர்ந்து நின்ற தொன்மை நூலின்
றொடர்நிலை மரபி னிசைவது பாவே. (கூஎ)

இஃது, பாக்கள் நூலின் கணமையவேண்டு முறை யிவ்வாறெனவுணர்த்து தனுதலிற்று:—என்னின், அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு, என்னுமழகுபொருந்திய பழமை நூல்களின்

முடிவு மரபே போற்பொருத்தமுடையதாய் வருவது பாட்டாமென்றார் :—இவற்றுளம்மையென்றது :

" சின்மென் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அம்மை தானே யடிநிமிர் வின்றே ;

என்றமையின் : சுருங்கிய மிருது வசனத்தாலினிமையான சிலவடிகளாற் பொருள் விளங்க வருவது :—

" மனத்துக்கண் மாசிலனாத லனைத்தறன்
ஆகுல நீர பிற"

என்றாற்போல்வனவாம்.

அழகென்றது—

" செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே யழகெனப் படுமே."

என்றமையின் : திரிசொற்களாலோசை யினியவாகப் புணர்க்கப்பட்டவற்றிற் கழகெனட் பெயர் ;

" துணியிரும் பௌவங் குறைய வாங்கி
யணிகிளை ரடுக்கன் முற்றிய வெழிலி,"

என்றாற்போல்வனவாம்.

தொன்மையென்றது—

“ தொன்மைதானே—உரையொடு புணர்ந்த பழமை
மேற்றே.”

என்றமையின் : நூல்களோடு பழகியும், செந்தமிழுரை பழகியும் உண்டாய பயிர்ச்சியினால் நயமும் பழமையும் பொலிய வருவது :

“ கூறகரு மேகமென்னச் சொரிமதக் களிறுதூய
பாற்கடல் சுவறவாங்கும் பனைக்கைவெங்கோட்டுவேழம்.”

என்றாற்போல்வனவாம்.

தோல் என்றது—

“ இழுமென மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியா லடிநிமிர்ந் தொழுகினுந்
தோலென மொழிப தொன்னெறிப் புலவர்.”

என்றமையின் ; இழுமென மெல்லிய சொற்களால் விழுமிய வாய்க்கிடப்பனவும் மொழிகள் பலவற்றாற் பலவடியாய் நடைபெறுவனவும் தோலெனப்படுவது.

“ பாயிருள் பரப்பகங் குறையப் பாம்பின்
ஆயிர மணிவிளக் கழலுஞ் சேக்கைத்
துணிதரு வெள்ள நுயில்புடை பெயர்க்கும்
ஒளியோன் காஞ்சி யெனிதெனக் கூறின்
இம்மை யில்லை மறுமை யில்லை,”

என்றாற்போல்வனவாம்.

விருந்தென்பது—

“விருந்துதானே—புதியது புனைந்த யாப்பின்மேற்றே.”
என்றமையின்; ஓர் நூதனப் பொருண் மேற்குறித்த பொழுதுள் பாடியது:—இதற்கிலக்கியம், ஆசு, மதுரம், சித்திர முதலான பாக்களாம்; இவை வந்துழிக்காண்க.

இயைபென்பது—

“ஞகார முதலா ளகார வீற்றுப்
புள்ளி யிறுதி யியைபென மொழிப.”

என்றமையின்; ஞணநமன யரலவழள வென்னும் பதினொரு புள்ளியுமீறாக வந்த பாட்டு: இவையும் வந்துழிக்காண்க.

புலனென்பது—

“தெரிந்த மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல்வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந்தோரே.”

என்றமையின்; இயற்சொல்லால் யாவர்க்கும் பொருளெளிதிற்றோன்ற வருவது:

"தந்தமுறியிலவர்வைத்த தயிர்பால்வெண்ணெயெட்டாமற்
குந்தியுரலினைமிசையேறியிளங்கோவியாமுன் கூத்தாடி
நந்தனமனையிலேசோதையிருநயனங்களிக்கவிளையாடும்
மைந்தனிருதாளொருநாளுமறவாதாரே பிறவாதார்."

என்றுறபோல்வனவாம்.

இழைபென்றது.

"ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடங்காது
குறளடி முதலா வைந்தடி காறும்
ஓங்கிய மொழியா னோங்கென மொழியின்
இயைபி னிலக்கண மியைந்த தாகும்."

என்றமையின: வல்லொற்று யாதும் வராமல், எழுத்தெண்ணியபடி வகுக்கப்பட்ட குறளடி முதலாக வைந்துவிதவடியு முறைபாக வைக்கப்பட்டோங்கிய சொற்களால் வருவது:—ஈண்டுக் குறளடி முதலாவென்றது; நான்கெழுத்து முதலாக வாறெழுத்து வரையிலெண்ணப்பட்ட மூன்றுவித அடி குறளடி யென்றும், ஏழெழுத்து முதலொன்பதெழுத்துகாறுமுயர்ந்த மூன்றடி சிந்தடி யென்றும், பத்து முதல் பதினான்கு வரையிலுயர்ந்த வைந்தடி யளவடியென்றும், பதினைந்தெழுத்து முதற் பதினேழெழுத்து வரையிலுயர்ந்த மூன்றடி நெடிலடி யென்றும், பதினெட்டு முதலிருபதெழுத்து வரையிலுயர்ந்த மூன்றடி கழிநெடிலடி யென்றுங் கூறுவர்: எனவே,

"நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே
நாலெழுத்து முதலா வறெழுத் தெல்லை
யேறிய நிலைத்த குறளடி யென்ப
வேழெழுத்தென்ப சிந்தடிக்களவே
யீரெழுத் தேற்ற மவ்வழி யான
பதினெழுத் தென்ப நேரடிக் களவே
யொத்த நாலெழுத் தேற்றலங் கடையே
மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே
யீரெழுத்து மிகுதலு மியல்பென மொழிப
மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
யீரெழுத் தேற்ற மவ்வழி யான."

என்றதனாலுணர்க: எழுத்தெண்ணுங்கால் குறுகிய இ, உ ஆய்தம், மெய்யிவை யொழித் தெண்ணுதல் முறை.

"போந்து போந்து சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி நொந்து
வண்டு சூழ விண்டு வீங்கி
நீர்வாய்க் கொண்டு நீண்ட நீலம்
ஊர்வா யுதை விச லூர்வாய்
மதியோர் வண்டோ டொல்கிமாலை
நன்மணங் கமழும் பன்னெல் லூர."

இது வல்லொற்றியலாதது பற்றி யிழைபெனப்படும். இசைவது பாவே யென்றமையாற் பிறவாற்றானு மோசை

யும் பொருளும், யாப்பிலக்கணமுமியைந்து வருவது பா வன்றெனக்கொண்டாரனறு; அவை பெரியதோர் சிறப்பி லவென்றுரென்க.

வண்ண நூலும் வாது கவியும்
எண்ணுறு சித்திர மியன்முத லுரிய
மெழுத்துச் சொற்பொரு ளியாப்பலங்காரம்
வழுத்தா நந்தம் வழுவா தாறு
மேற்ப கொண்டிட லியற்றன் முறையே. (௯௮)

இந்த பாவியற்றன் முறை யிதுவெனநுதலிற்று: என்னின: வண்ணம் நூலும், வாதுப்பாவும், எண்ணிய பாடுஞ் சித்திரகவி, ஆசுகவி மதுரகவி, விஸ்தாரகவி, முதலானவையும், இயலபாய் வழங்குகிற பிள்ளைத்தமிழ், அந்தாதி, கலம்பகம், கோவை, கைக்கிளை, மாலை, தசாங்கம், அலங்கார பஞ்சகம், ஊசல், மங்கலம், ஆற்றுப்படை, காப்பியம், உலா, தண்டகம், பதிகம், சதகம் முதலானவையும் ஊசிமுறி, யமகம் முதலானவையும், எழுத்துக்குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், யாப்புக்குற்றம், அலங்காரக்குற்றம், ஆநந்தக்குற்றம் என்னுமாறு குற்றங்களுமின்றி இலக்கியமாவதற்கும், கருத்து விளங்குவதற்கும் வேண்டும் நிர்ணயங்களையும் விசேஷத்தையும் பாரபுத்தியுற்றுக் கிரகித்து இயற்றுதல் முறையாமெனறுர். முற்சொன்ன சித்திரகவி ஆசுகவி முதலானவற்றிற் கிலக்கணமியம்பப்புகின்

இவ்வுரை விரிக்கப்பெற்றுப் பலவாறாக வழங்குகிற வேறு இலக்கண விலக்கிய நூல்களைத் தழுவி யெடுத்தாளவேண்டுவதின்றியமையாததாகலானும் அவற்றிற்கு வேறு இலக்கண நூல்களியல்பாயுளவாகலானும் குற்றம் ஆறுமிவ்விதமாமெனக்கூறுதும்: ஏனைய வுபதேச முறையானுணர்க: வண்ணப்பா முதலானவற்றைக் கடையிற் கூறுதும.

இவ்வாறு குற்றமும் விரிக்குமிடத்து இருபத்தொன்றாகப் பெருகும; எழுத்தெழுத்துக்குற்றம், எழுத்துச் சொற்குற்றம, எழுத்துப் பொருட் குற்றம, எழுத்தியாப்புக் குற்றம், எழுத்தலங்காரக்குற்றம், எழுத்தாநந்தக்குற்றம், சொற்சொற்குற்றம, சொற்பொருட்குற்றம, சொல்யாப்புக்குற்றம், சொல்லலங்காரக்குற்றம், சொல்லாநந்தக்குற்றம பொருள்பொருள் குற்றம, பொருள் யாப்புக்குற்றம், பொருளலங்காரக்குற்றம, பொருளாநந்தக்குற்றம், யாப்பியாப்புக்குற்றம், யாப்பணிக்குற்றம், யாப்பாநந்தக்குற்றம், அலங்கார வலங்காரக்குற்றம், அலங்காரவாநந்தக் குற்றம், ஆநந்தவாநந்தக்குற்றம, எனுமிவையாம்.

இவற்றுளெழுத்துக் குற்றமாவது:— "உந்திமுதலா முந்துவளி தோன்றி" என்னுஞ் சூத்திர விதியினுணர்த்திய தானம் வேறுபடுத்திசைப்பதுவே. 'ழ,' 'ள,' என்பனவற்றைச் சாதாரணமாய்க் கிராமவெழுத்து சாலைகளில், 'அள ஆன,' 'உள ஆன,' என்றிசைப்பனபோலாம;

சொல்லெழுத்துக் குற்றமாவது :— எழுத்திணைத்துச் சொல்லாக்குவதில் பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரமென்பனவற்றிற் கியல்பாயமைந்த விலக்கண நெறியினின்று இழுக்கி யிணைப்பது : ‘உணர்ச்சி’ என்பதை ‘உணர்சி’ எனவும் ‘வாழைப்பழம்’ என்பதை ‘வாழை பழம்’ என்றாற்போல்வனவாம்,

பொருளெழுத்துக் குற்றமாவது :—“உயிர்மவிலாறும் தபநவிலைந்தும்” எனனுங் சூததிறபுகன்ற ஒரெழுததொரு மொழிகள் வழங்கவேண்டுழி வழங்காமையும், சுட்டு, வினா, இடைச்சொல், இவை உணர்த்தும் எழுத்துக்கள் நிற்கவேண்டிய விடதது நிற்காமல் பொருள் மயககமுண்டாக்கு வனவாம். சேய்மை வழங்கவேண்டுமிடமண்மைச் சுட்டு நிற்பதும், “அவனே சென்றா” னெனக்கூறவேண்டுழி “அவன் சென்றானே” எனவிசைப்பதும் போலவாம்.

எழுத்தியாப்பு—யாப்பெழுத்துக் குற்றம் :— யாப்பித்த கையெழுத்தாற்றொடங்கவேண்டு மிய்யெழுததானிற வேண்டுமென்பன பிழைபபதாம். வெண்பா ‘ஏ’ எனுமெழுததாலிறுவது போன்ற குற்றம்.

எழுத்தலங்காரக் குறறம்:— எழுத்தானலங்காரமுடைத்தாய்ப் பாடுங்கால் முரணிவருவதாம். வல்லோசையிற்பாடுமிடத்து மெல்லோசை விரவுவது போலாம்.

இடங்கைவெஞ்சிலை, வலங்கைவாளியி, னெதிர்ந்த
தாரையை, யிலங்குமாழியின், விலங்கியோண."

எனுமிடத்து வலககைவாளி எனவரினியாப்புக்குற்றமில தாயினும் அலங்காரக்குற்றமாம்.

எழுத்தாநந்தக்குற்றம் :— இயல்பாயியையந்தாநந்தத் தைத்தரவேண்டுமிடதது வழுவினவெழுத்தியையவது.

" ஆழி யிழைப்பப் பகல்போ மிரவெல்லாந்
தோழி துணையாத் துயர் தீரும்—வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ வெனனுஞ்
செறுமாலை சென்றடைநத போது."

திரைவோஒ என்பது இயற்பெயரைச் சார்ந்து அள பெழுநதமை யினெழுத்தாநந்தம் 'திரையாஅ' வென்பது எழுத்தாநந்தக் குற்றமாம :—

சொற்குற்றமாவது :—இல்லாச் சொற்களைப் புணர்த் தலாம்.

'துளி' என்பதற்கு 'தூமி' என்றற்போல்வன.

சொற்பொருள்— பொருட்சொற்குற்றம் :—இப்பொ ருளைக்குறிக்கினற சொல்லின்ன சொல் அது இநதகைத்து எனு மரபிழுக்குவதாம்.

'வாழை' என்பதை 'வாளை' யெனவும் உளுந்தென் பதை 'உழுந்து' என்றாற்போல்வனவாம்.

சொல்யாப்பு — யாப்புச்சொற்குற்றம் :— இச்சொல் முதன்மையாய் நிற்கவேண்டுமென்ற விடத்தவ்வாறு நில்லாதது. மங்கலமாய சொல் தலைமை பெறுநிற்குவன போலவாம். தனிச சொற் பிறழ்ந்து நிற்பதும் மற்றுமிவை போல்வனவும கொள்க.

சொல்லலங்காரச்குற்றம் :—" மாதுல னாகிய மேதில னாகியும வஞ்சன் கஞ்சன வரவிட்ட" எனுமிடத்து 'மாது லன—ஏதிலன, வஞ்சன்—கஞ்சன்' என்பன சொல்லலங் காரம் ; வேறுற்றுள மொழிமுரண் வருமெனி னலங்காரச் சொற்குற்றமாம்,

சொல்லாநந்தக் குற்றமாவது :— இயற்சொல்லானி யற்பொருளை விளக்க வியலபினமையாமையாம்.

" என்னிற் பொலிந்த இவன்முக மென்றெண்ணி
தன்னிற் குறைபடுப பான்றன் மதியம்—மின்னி
விரிந்திலங்கு வெண்குடைச் செங்கோல் விசயன்
எரிந்திலங்கு வேலினெழும்."

இதில் எரிந்திலங்கு என்பது சொல்லாநந்தம் : தலை மகன்மேல் எரிந்து என்னுஞ் சொற்புணர்ந்தமையின் என்க. இவ்வாறு வரவேண்டுழி விளக்காதது குற்றமாம்.

பொருட்குற்றமாவது :—ஒரு பொருள் விளங்கப்பாடு மிடத் தப்பொருள் விளங்காதுபோவது. "வெற்றெனத் தொடுத்தல்."

பொருள்யாப்பு — யாப்புப்பொருட்குற்றம் :— பொருண் மயக்கமாய்ப் புணர்ப்பது.

இது "வினைசார்பின மிடமேவி விளங்காப் பலபொரு ளொருசொற் பணிப்பர் சிறப்பெடுத்தே." என்றதுக் கொத்து பணிககாதிருத்தலும்- "செம்பொன்பதின்றொடி" என்றாற்போலத் தொடுத்துவந்து பயன்றராதனவுமாம்.

பொருளலங்காரக் குற்றமாவது :— அலங்காரத்தின் பொருள் மாறுக வழங்குவது :—

"பவளம் போன்ற விரல்."

என்றால், பவளத்தின் கடினத்தைக் கூறுவது பொருளலங் காரக்குற்றமாம்.

பெருளாநந்தக் குற்றமாவது :— ஆநந்தத்திற்கு ஏது வாய பொருளை வேண்டுழி யிசைக்காமையாம் :—

"எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்று நாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கினற விமையிற் காத்தனா."

இதிற் ‘கண்ணிணை காக்கின்ற விமையிற் காத்தனர்’ என்றவிடத்துச் சாதாரணமாய் விளங்குகின்ற பொருளின் புறமே மேலிமைபெரிது, கீழிமை சிறிது, மேலிமை இயங்குவது, கீழிமை யியங்காதது, மேலிமை யெப்படி வந்து கீழிமையைச் சேர்ந்து கண்ணைக்காக்கின்றதோ வவ்வாறு இலட்சுமணன் யாகசாலை வாயிலில் நிலைத்துக் காக்க இராமரானவர் நிற்காமற்றிரிந்து இடைக்கிடை இலட்சுமணனிடம் வந்து எச்சரிக்கை செய்து காத்தார்” என்றது பொருளாநந்தமாகும்: அவ்வாறு கூறுவிடின் ஆநந்தமாகப் பொருளமைதியில்லை. இதுவன்றி விரகப்பெருக்கங் கூறவந்தவிடத்தும், மணம், தவம், கொடை முதலானவை கூறவந்தவிடத்தும், இனிமையும், நயமுமுள்ள பொருள் பயவாமையும், பொருள் கோண்முறைமை யெட்டினுளடங்காது வருதலுமாம்.

யாப்புக்குற்றமாவது :—

“ குன்றக்கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக்கூறல்
வழூஉச் சொற் புணர்த்தன் மயங்கவைத்தல்
வெற்றெனத தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்று தேய்ந்திறுத னின்று பயனின்மை
யென்றிவை யீரைங் குற்ற நூற்கே.”

என்றதனுணர்க.

யாப்பலங்காரக்குற்றமாவது :—

யாப்பியலுக்கேலாதவனைத்துமெனக் கொள்க.

யாப்பாநந்தக் குற்றமாவது :—

" சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க்கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசையுடைமை யாழ முடைத்தாதல்
முறையின்வைப்பே யுலக மலையாமை
விழுமியது பயத்தல் விளங்கு தாரணத்த
தாகுத னூலிற் கழகெனும் பத்தே."

எனுமிப்பத்தழகுமின்றி வருதலாம்.

அலங்காரக்குற்றம் :— ஏலாதவைற்றை யலங்கரிப்பதாம.

" வெண்டிங்கள் போன்றிலங்கு வெண்சங்கு—சங்கினைய
வண்டிலங்கு தாழை வளர்தோடு."

இதில் திங்கள்போன்ற சங்கு என வியைந்தவாறு குற்றமின்மையும், சங்குபோன்ற தாழம்பூ வென்ன வேலாது குற்றமாயமையுமறிக.

அலங்கார வானந்தக்குற்றம்:—ஆநந்தத்தைக்கொடுக் காதவிடத்தில் வர்ணித்துப்பாடுவதும், கொடுக்குமிடத்தில் வர்ணிக்காமையுமாம. இவை வந்துழிக்காண்க.

ஆநந்தக்குற்றம்:—சிங்காரம், வீரம், கருணை, அற்புதம், ஆசியம், பயானகம, பீவத்சம், ரௌத்திரம், சோசம, என்னும நவரசங்களுள் யாதொன்றையும பயவாமையாம்.

இனி இக்குற்றங்கள் நீங்கின பெரும்பான்மையுள; அவை:—

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனு
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது."

என்றாற்போல்வனவாம்.

நாலே மந்திர நூலுஞ் சங்கீதா
மிர்த மூதுசொற் பிரியங் கதமே
வாழ்த்தொடு பிறவும வருமோ ரெழுபினுந்
செயமைமாபி னியலுஞ் செயிரிதிர் செய்யுள்
வகுத்ததுறை யாகவும் வகுத்தனர் கொளலே. (௬௬.)

இஃது இந்நூலிற் சொற் புறநடை யுணர்த்துதனுத லிற்று என்னெனின் :—நூல், மந்திரம், சந்தோபிசிதம், முதுசொல், அங்கதம், வாழ்த்து முதலியன ஓரடியானு மெனைத் தடியானும் வருமாகலின், அவ்வாறு வருங்கால் அவற்றை யான்றோர் மரபுரிமை கோசகி·பிழைபாடிலதெனக் கொண்டமை யானை, அவையுமின்றுஞ் செம்மையாய்க் குற்றந் தீர்ந்து நடப்பனவாகிய விந்நூலுட்கூறுதலையு முளவே லாயவை யன்றுந் செய்யுளியலின்கட் பொருந்தமு டையவாகவே யமைத்துக்கொளல் வேண்டுமென்றார்.

இவ்விடத்திற் சவலை வெண்பா, வண்ணம், வாதுப்பா வண்ணம—இவற்றின் இலக்கணங்களைச் சிறிது சொல்வது மைதியாகலின் விவரிக்கப் பெறுமாறு.

சவலை வெண்பா வென்பது :—இரண்டு குறள் வெண் பா ஒரு விகற்பத்தால் வருவது.

"அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவல்ல
நட்டாலும் நண்பல்லா நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்."

என வந்தமை யுணர்க.

இனி வண்ணம் வருமாறு :—

“தூங்கேந் தடுக்கல் பிரிதன் மயங்கிசை வைத்துபின்னும்
பாங்கே யகவ லொழுகல் வலிமெலிப் பாற்படுத்திட்
டாங்கே குறிநெடில் வல்லின மெல்லின மோடிடையைத்
தாங்கா துறழ்தரத் தாம்வண்ண நூறுந் தலைப்படுமே.”

என்றாராகலின் ஆசிரியர் தொல்கப்பியரிவற்றையிருப தாக நுதலினமை பற்றியுமதுவே யினிது விளங்கும். எனெனின் ;

“வண்ணந்தாமே நாலைந்தென்ப—அவைதாம்
பாஅ வண்ணந் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ண மெல்லிசை வண்ணம்
இயைபு வண்ண மளபெடை வண்ணம்
நெடுஞ்சீர் வண்ணங் குறுஞ்சீர் வண்ணம்
சித்திர வண்ண நலிபு வண்ணம்
அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்
ஒழுகு வண்ண மொரூஉ வண்ணம்
எண்ணு வண்ண மகைப்பு வண்ணம்
தூங்கல் வண்ண மேந்தல் வண்ணம்
உருட்டு வண்ண முடுகு வண்ணமென்
றாங்கவை யென்ப வறிந்திசி னோரே.”

என்றாராகலின் அவற்றுட்,

“பாஅ வண்ணஞ் சொற்சீர்த் தாகி
நூற்பாற் பயிலு நோக்கிற் றென்ப.” இவை

"அவற்றுள்—அ, இ, உ, எ, ஒவ்வெனுமப்பாலைந்து மோ
ரள பிசைக்குங் குற்றெழுத்தென்ப."

என்றாற்போல்வனவாம்.

"தாஅ வண்ணம்—இடையிட்டுவந்த வெதுகைத் தாகும்."

இவை, "உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
யலங்கு குலையீந்தின் சிலம்பிபொதி செங்காய்."

என்றாற்போல்வனவாம்.

"வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே."

இவை, "முட்டாட்டாமரை," "விக்கா வுக்கா," என்றாற் போல்வனவாம்.

"மெல்லிசை வண்ண மெல்லெழுத்து மிகுமே,"

இவை "பொன்னி னன்ன புன்னை நுண்டாது," என்றாற்போல்வனவாம்.

"இயைபு வண்ண மிடையெழுத்து மிகுமே."

இவை, "ஐயவால் வெள்ளருவி வரைமிசை யிழியவும்" என்றாற்போல்வனவாம்.

"அளபெடை வண்ண மளபெடை பயிலும்."

இவை, "தாஅட் டாஅ மரை" என்றாற்போல்வன வாம்.

"நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்"

இவை, "மாவாராதே மாவாராதே" என்றாற்போல் வனவாம்.

"குறுஞ்சீர் வண்ணங் குற்றெழுத்துப் பயிலும்"

இவை, "உறுபுய லெழிலி தொகுபெயல் பொழிய
சிறுகொடி யவரை பொதுளி யவிழ"

எனறாற்போல்வனவாம்.

"சித்திர வண்ணங் குறியவு நெடியவு
மொத்து நேர்ந் தடுக்கிய வியற்கைத் தென்ப."

இவை, "சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே."

என்றாற்போல்வனவாம்.

"நலிபு வண்ண மாய்தம் பயிலும்"

இவை, "அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை," என்றாற்போல்வனவாம

"ஓரூஉ வண்ண மொரூஉத் தொடை தொடுக்கும்."

இவை, "சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே."

என்றாற்போல்வனவாம்.

"எண்ணு வண்ண மெண்ணுப் பயிலும்."

இவை, "நன்னற வியள நறும் பூணத்தி
தன்னருங் கடுந்திறற் றேற்றங் காட்டினளே."

என்றாற்போல்வனவாம்.

"அகைப்பு வண்ண மறுத்தறுத் தொழுகும்."

இவை, "வாரா ராயினும் வரினுமவர்நமக்—கியாராகிய ரோதோழி."

என்றாற்போல்வனவாம்.

"தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்."

இவை, "யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
றானூட யானுணர்த்தத் தானுணரான்-றேனூடு."

என்றாற்போல்வனவாம்.

"ஏந்தல்வண்ணம்—சொல்லியது சொல்லிற் சொல்லியது சிறக்கும."

"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகல் வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாணுண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்."

என்றாற்போல்வனவாம்.

"உருட்டு வண்ண மராகந் தொடுக்கும்."

இவை, "உருசெழு முருகிய முருமென வதிர்தொறு
மருகெழு கிறகொடு மணவரு மணிமயில்."

என்றாற்போல்வனவாம்.

"முடுகு வண்ண மடியிறந் தொழுகும்."

இவை, "நெறியறி செறிகுறி புரிதரி" என்றாற்போல்வனவாம்.

## வாதுப்பா வண்ணம்.

"வாதுப் பாவே வண்ணப் பாவே
வண்ண மொன்றுக்குப் பாத நான்கே
பாதமிரண்டு கலையெனப் படுமே
கலை யொரு மூன்று சீரெனத் தகுமே
சீரோ துள்ளலெனச் செப்பப் படுமே

குறியுங் குணமுமன்றி நிறைவுங் குறைவுமன்றி
மறையொன் றெனவிளம்ப விமலம தாகி
அசலம் பெறவுயர்ந்து விபுலம் பெறவளர்ந்து
சபலஞ் சபலமென்று ணறிவினா காண
ஞான வெளியிடை மேவுமுயிராட, (௯)

அனலொன் றிடவெரிந்து புகைமண் டியெழன்று
புனலொன் றிடவமிழ்ந்து மடிகில தாதை
சருவும் பொழுதுயர்ந்து சலனம் பதிவதலது
சமர்கொண் டழிவதன்றே ரிடலபின தாகும்
அவனென பதுவுமன்றி யவளென் பதுவுமன்றி
அதுவென் பதுவுமன்றி யெழில்கொடு லாவும்
ஆருநிலையறி யாத படியே, (௰)

இருளென் பதுவுமன்றி யொளியென் பதுவுமன்றி
எவையுந் தனுளடங்க வொருமுத லாகும்
உளதென பதுவுமன்றி யிலதென பதுவுமன்றி
உலகந் தொழவிருந்த வயன்முத லோர்கள்
எவருங் கலைகொண்டு சமயங்க ளில்விழுந்து
சுழலும் பொழுதிரங்கி யருள்செயு மாறு
அடரரியசக மாயை யறவே, (௰௯)

எனதென் பதையிகழ்ந்த வறிவின் றிரளினின்று
மறிவொன் றெனவிளங்கு முபயம தாக

அறியுந் தரமுமன்று பிறியுந் தரமுமன்று
அசரஞ் சரமிரண்டி னொருபடி யாகி
எதுசந் தமுநிறைந்த தெதுசிந் தனையிறந்த
தெதுமங் களசுபங்கொள் சுகவடி வாகும்
யாது பரமதை நாடி யறிநீ (௨)

பருவங் குலவுகின்ற மடமங் கையர்தொடங்கு
கபடந் தனில் விழுந்து கெடுநினை வாகி
வலையின் புடைமறிந்த மறியென் றவசமுண்டு
வசனா திறமுமின்றி யவரித ழூறன்
பருகுந தொழிலிணங்கி யிரவும் பகலுமின்சொல்
பகரும் படிதுணிந்து குழலழ காக
மாலை வகைபல் சூடி யுடனே, (௨௫)

பதுமங் கனையிசைந்த முலையென் றதையுகந்து
வரிவண் டெனவுமுன்று கலிலென வாடுஞ்
சிறுகிண் கிணிசிலம்பு புனைதண் டைகண்முழங்கு
மொலிநன் றெனமகிழ்ந்து செவிகொள லாகி
பசுமஞ் சளின்வியந்த மணமுந் திடமுகந்து
பலமிஞ் சிடவிறைஞ்சி வரிசையி னோடு
காலின் மிசைமுடி சூடி மயலாய், (௩)

மருளுந் தெருளும் வந்து கதியென் பதைமறந்து
மதனன் சலதி பொங்க விரணம தான

அளிபுண்டனை நினைந்து விறல்கொண்டுற வளைந்து
சுரதஞ் சுகமிதென்று மயலினராகி
மருவுந் தொழின் மிகுந்து தினமுந் தினமும் விஞ்சி
வளரும் பிறை குறைந்த படிமதி சோர
வானரமதென மேனி திரையாய் (ஐ௫)

வயதும் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று
வரவுஞ் செயலழிந்து ளிருமலு மாகி
அனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சுடர்களின்று
முகமுங் களைகளின்று சரியென நாடி
மனையின் புறவிருந்த வினமுங் குலைகுலைந்து
கலகஞ் செயவிருண்ட யமன்வரும் வேளை
ஏது துணைபழி கார மனமே. (க)

முற்றிற்று.

PRINTED AT THE LITERARY SUN PRESS,—COIMBATORE.

# பிழை திருத்தம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1-ஆவது | பக்கம் | 3-ஆவது | வரி, | உத்தி=உததி |
| 9 | ,, | 4 | ,, | கணி=கனி |
| 13 | ,, | 4 | ,, | பத்தலை=யத்தலை |
| 55 | ,, | 10 | ,, | தாழிசை |
| 58 | ,, | 8 | ,, | ணவ=வண |
| 60 | ,, | 5 | ,, | சிற்றென்=சிற்றெண் |
| 64 | ,. | 14 | ,, | வழக்கும்=வழங்கும் |
| 90 | ,, | 3 | ,, | லைசோதை=லசோதை |
| 96 | ,, | 10 | ,, | உண்பன=எண்பன |